உ

திருச்செந்திலாண்டவன் துணை



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும்
ஸ்ரீ காசிமடம் ஜூனியர் வித்துவான் ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார
சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும்

# வருக வருக பொங்கலே!



திரு. ஏ. பி. எஸ். மணி அவர்கள்,
29, உஸ்மான்ரோடு, சென்னை.

வருக வருக பொங்கலே — இன்ப
வாழ்வு மலர்க பொங்கலே
தருக தருக இன்பமே — வாழ்வு
தழைத்து ஓங்க என்றுமே (வருக)

உண்மை என்றும் வெல்கவே — நல்ல
உழைப்பு நாளும் உயரவே
வன்மை கொண்டு நாட்டிலே — கொடிய
வறுமை தன்னை ஒட்டவே (வருக)

அன்பு என்றும் வாழ்கவே — உலகில்
அமைதி எங்கும் சூழ்கவே
பண்பு கொண்டு வாழ்கவே — பாரில்
பசுமை எங்கும் படரவே (வருக)

# உள்ளுறை

---


வரிசை எண், பொருள் பக்கம்

கட்டுரையாளர்

1. குமரகுருபரன் "பதினெட்டாவது ஆண்டு மலர்" – தோற்றுவாய் i
2. நீதிநெறி விளக்கம் (கட்டுரை 7) 1
   தொண்டைமண்டலாதீனம் குருமகா சந்நிதானம்,
   சிலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்,
   காஞ்சிபுரம்.
3. முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ் - உரைநடை 6
   பாலகவி, வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார்
   அவர்கள், தேவகோட்டை.
4. திருமந்திரம் ஐந்தாம் தந்திரம் Tirumantiram Tantra the Fifth 9
   டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A. D. Litt.
   சட்டசபை உறுப்பினர், சென்னை – 31.
5. Why I became a Vegetarian? 11
   H. H. The Dalai Lama.
6. மாணவர் குறிக்கோள் 17
   திரு. ச, சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், B. A., B. T.,
   சென்னை.
7. யாண்டும் இடும்பை இல! 28
   பாலகவி வயிநாகரம். திரு. வே. இராமநாதன் செட்டியார்
   அவர்கள், தேவகோட்டை.
8. மெய்யடியாரின் வாழ்க்கை நெறி 33
   சுவாமி பரமாத்மானந்தா அவர்கள், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
   மயிலாப்பூர், சென்னை.
9. ஓடக்காரன் 40
   திரு. T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்கள், B. A., L. T.,
   உதவி ஆணையர், இந்து அறநிலையப் பாதுகாப்பு
   இலாகா, காஞ்சிபுரம்.

வரிசை எண். பொருள் பக்கம்

10. தகப்பன்சாமி சிவபிராற்குச் செய்த உபதேசம் 44
தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள்
சென்னை.

11. இறை வழிபாடு 49
திருப்புகழ் அமிர்தம் ஆசிரியர் :
திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள், சென்னை,

12. கொடை 62
பேராசிரியர் : திரு. E. S. வரதராஜய்யர் அவர்கள், புனு,

13. தமிழ் நாட்டில் சைவ சித்தாந்த நூல்கள் தோன்றிய வரலாறு 68
கல்வெட்டு ஆராய்ச்சிக்கலைஞர், வித்துவான்,
திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள், சென்னை.

14. Hymns of the Tamil Saivite Saints 76

15. முப்பாலில் முரண் ? 77
திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள், M. A.,
துணைத் தமிழ் பேராசிரியர், சரபோசி கல்லூரி,
தஞ்சாவூர்.

16. தலையாய மனிதன் 85
திரு. K. M. வேங்கடராமையா அவர்கள், M. A., B. O. L.,
பிரின்சிப்பால், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

17. 'ஒருகால் கும்பிட்டால் போதும்!' 89
பேராசிரியர், திரு. கா. மாயாண்டி பாரதி அவர்கள்,
எம். ஏ., பி. ஓ. எல்., St. John's College,
Palamcottah.

18. திருவாசக அநுபூதி உரை 94
(சீர்காழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது.)

19. The Raja of Ramnad Memorial Feeding Charity
In The Month Of Adi At Varanasi - Capital
Rs. 6000/- 95

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை

# குமரகுருபரன்

மலர் 18 | பராபவஹு தைத் திங்கள் 1ம் [14-1-67] | இதழ் 1

## "குமரகுருபரன்"
## பதினெட்டாவது ஆண்டு மலர்

### தோற்றுவாய்

"பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்" —குமரகுருபரர்.

"குமரகுருபரன்" திங்களிதழ் பதினேழு ஆண்டுகளாகச் சீரும் சிறப்பும் பொருந்தி வளர்ந்து, இன்று பதினெட்டாம் ஆண்டுத் தொடக்கம் எய்துகின்றது. இப்பதினேழாண்டுகளாகக் "குமரகுருபரன்" வாசகர்களுக்கு அறிவு ஆற்றல்களும் இறையருள் விளக்கமும் நல்கும் கட்டுரைகள் தாங்கி, அப்போதலர்ந்த செந்தாமரையின் அழகோடு வழக்கம்போல் பொங்கல் நன்னாளில் வாசகர்களுக்கு நல்விருந்தளிக்க வருகின்றது.

மாரியன்ன வண்மையும், "தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளர்" ஆகிய பெருந்தகைமையும், 'ஈத்துவக்கும் இன்பமே' தமக் குரிய குறிக்கோளாகக் கொண்ட துறவுடைமையும், சைவ வான் பயிர் தழைக்கச் செய்யும் பெருமுகிலின் தன்மையும் பூண்டு விளங்கும் பெருந்தவச் செல்வர் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் திருவருள் நோக்கப் பேருதவியினுல் தோன்றி வளர்ந்துவரும் "குமரகுருபரன்", வாசகர்கள் யாவரும் பாராட்டும் வண்ணம் சிறந்த மொழித் தொண்டும் சிவநெறித் தொண்டும் ஆற்றி வருகின்றது.

ஆதி குமரகுருபர சுவாமிகள் சிவநெறியிடத்தும் தீந்தமிழிடத்தும் கொண்ட பேரன்பு மாற்ற மனங்கழிய நின்றெளிரும் மாண்பு உடையது. அவர் பாடியருளிய பனுவல்கள் தமிழ் இலக்கியத்துக்கே தனிச்சிறப்பு நல்கும் அகம் புறம் ஆகிய பொருளிலக்கண அமைதி களும், தமிழ், வடமொழி இலக்கியப் பொருள் நுணுக்கங்களும் நிறைந்துள்ளன; பொய்கண்டு அகலவும், மெய்ந்நிலை தேறவும் துணி பொருள் உணர்த்தும் மெய்ப்பொருட் பெட்டகமாகவும் திகழ்கின்றன. இக் கருவூலத்தின் பயனை எளிதின் யாவரும் பெற்றுநுகர ஒவ்வொரு திங்களும் குமரகுருபரனில் கட்டுரை வெளிவருவதை வாசகர்கள் நன்கு அறிவர்.

இங்ஙனம் சிறந்த முறையில் இத்திங்களிதழ் விளங்குமாறு தோற்றுவித்தருளியும், பல்லாற்றானும் இவ்விதழ் சிறப்புற அருள்கள் பாலித்தும் ஊக்குவித்தருளும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு, இப் பதினெட்டாம் ஆண்டுமலரை அன்புக்காணிக்கையாகத் திசை நோக்கிய வணக்கங்களுடன் சமர்ப்பணம் செய்து கொள்கிறேன்.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் ஆணைவழிநின்றொழுகும் ஸ்ரீ காசிமடம் ஜுனியர், வித்துவான், ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், ஆசிரியர் குழுவில் மகிழ்ச்சியுடன் கலந்து, ஆக்க மும் ஊக்கமும் நிறைந்த அறிவுரைகளை அவ்வப்பொழுது அருளுகின் றார்கள். அவர்களுக்கும் நன்றி.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் அன்பும், அருளும், அறிவுரைகளும், ஸ்ரீ இளவரசு சுவாமிகள் அவர்களின் ஊக்கவுரை

களும், பிறவும் துணைபுரிய, இனிவரும் ஆண்டுகளிலும், 'குமரகுருபரன்' முன்னிலும் பன்மடங்கு சிறப்புறும் என்பது உறுதி.

ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் அருளிச் செய்த நூல்களுள் ஒவ்வொன்றாக நுண்பொருள் விளக்கக் கட்டுரைகள் எழுதியருள் பவர்கள், காஞ்சிபுரம், தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம், ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள் ஆவார்கள். அவர்கள் தொடர்ந்து இவ்வாண்டும் எழுதியருள்வார்கள். டாக்டர் திரு. பா. நடராஜன் எம். ஏ., டி. லிட். அவர்களின் திருமந்திர ஆங்கில மொழிபெயர்ப்பும் குறிப்புரையும் இவ்வாண்டும் தொடர்ந்து கிடைக் கும் நல்விருந்துகளில் ஒன்றாகும். Hymns of the Tamil Saivite Saints என்ற நூலில் உள்ள திருமுறைப் பாடல்களின் ஆங்கில மொழி பெயர்ப்பும் தொடர்ந்து வெளிவரும்.

சென்னை, திருப்புகழமிர்தம் ஆசிரியர் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள், "ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்" ஆசிரியர் சென்னை ஸ்ரீலஸ்ரீ பரமாத்மானந்தா சுவாமிகள் அவர்கள், தேவகோட்டை பாலகவி வயிநாகரம் திரு. இராமனுதன் செட்டியார் அவர்கள், தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராயபிள்ளை அவர்கள், திரு. சுந்தரேசவாண்டையார் அவர்கள், திரு. சச்சிதானந்தம்பிள்ளை அவர்கள், இந்து அறநிலைய பாது காப்பு இலாகா காஞ்சிபுரம் உதவி ஆணையர் T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்கள், பனசைச் செந்தமிழ்க் கல்லூரி தலைவர் K. M. வேங்கட ராமையா அவர்கள், தஞ்சை சரபோஜி கல்லூரி பேராசிரியர் திரு. விம லானந்தம் அவர்கள், பாளையங்கோட்டை தூயயோவான் கல்லூரிப் பேராசிரியர் கா. மாயாண்டிபாரதி அவர்கள், பூனாவிலிருக்கும் பேராசி ரியர் E. S. வரதராஜய்யர் அவர்கள், திபெத்துநாடு மாட்சிமை தங்கிய டலே லாமா அவர்கள் "Why I became a Vegetarian" என்ற ஆங்கிலக் கட்டுரையும், திருவாசகப் பாவிற்கு சீர்காழித் தாண்டவராயர் அவர்கள் அநுபூதி உரையும் இன்னும் பல அறிஞர்களின் எழுத்துப் படைப்புக் களைக் "குமரகுருபரன்" தன் வாசகர்களுக்கு அளிக்கா நிற்கும்.

குமரகுருபரனுக்குக் கட்டுரைகள் வழங்கும் அன்பர்கள் யாவருக் கும் நன்றி.

தாள் விலையேற்றம் அச்சுக்கூலி உயர்வு முதலிய தவிர்க்க முடியாத காரணங்களால் இந்தயாண்டு தைத்திங்கள் 1-ம் வ இப்பதி

னெட்டாம் ஆண்டு மலர் முதல் ஆண்டுச் சந்தா ரு. 2-25 லிருந்து ரு. 3-00 ஆக உயர்த்தப்பெற்றுள்ளது. தனிப்பிரதி 0-25 பைசே. சந்தா நேயர்கள் இச்சிறு சந்தாவுயர்வை ஏற்றுத் தொடர்ந்து சந்தா செலுத்தி ஆதரிப்பார்கள்ஆகுக!

பல்வேறு துறைகளில், புதுப்புதுக் கருத்துக்களை அமைத்து நுண் மாண் நுழைபுலம் செறிந்த கட்டுரைகளையும், கவிதைகளையும், இசைப் ்பாடல்களையும், மொழிபெயர்ப்புக்களையும், மக்கள் நலனும் தமிழார் வமும் சமயப்பற்றுமே அடிப்படையாகக் கொண்டு எழுதிவரும் எல்லா அன்பர்களுக்கும் நன்றி உரியதாகுக. "குமரகுருபரன்" நல்ல முறை யில் திங்கள் தோறும் வெளிவருவதற்கு எப்பொழுதும் உதவிவரும் அன்பர்களுக்கும், குமரகுருபரன் வளர்ச்சிக்காக அயராது உழைக்கும் ஆசிரியர் குழுவினருக்கும், உரிய காலத்தில் அச்சுப் பணியை நிறைவு செய்து உதவும் குமரகுருபரன் அச்சகப் பணியாளர்களுக்கும், இதழ் களைக் குறித்த காலத்தில் அனுப்பி உதவிவரும் கலைக்கோவில் சிப்பந்திகளுக்கும் செந்திலாண்டவன் திருவருள் துணை முன்னிற்க!

தமிழும் சைவமும் தழைத்தினிது ஓங்குக! குமரகுருபரன் வளர்க!

இங்ஙனம்.

ஸ்ரீவைகுண்டம்,
13-1-'67.

டி. எம். குமரகுருபரன் பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
நிர்வாக ஆசிரியர்.



உ

சிவ சிவ

# " குமரகுருபரன் " திங்களிதழ்

# சந்தாவுயர்வு அறிவிப்பு

"குமரகுருபரன்" திங்களிதழ் 17 ஆண்டுகளாகச் சைவமும் தமிழும் பரப்பிவருவதை வாசகர்கள் நன்கு அறிவர். தாள் விலையேற்றம், அச்சியற்றும் செலவு ஏற்றம் முதலாகிய தவிர்க்க முடியாத காரணங்களால் நாளிது 1967-ம் வருஷம் ஜனவரி மாதம் முதற்கொண்டு அதாவது பராபவ தை இதழ் முதற்கொண்டு ஆண்டுச் சந்தாவை ரூ. 2-25 லிருந்து ரூ. 3 ஆக உயர்த்தப் பெற்றிருக்கிறது. சந்தாதார்கள் இச்சிறு சந்தா வுயர்வை ஏற்றும் புதிய விகிதத்தில் சந்தாவைச் செலுத்திக் குமரகுருபரனைப் பெற்றுப் பயன் பெறுவாராகுக.

டி. எம். குமரகுருபரன் பிள்ளை

பி. ஏ., பி. எல்.

நிர்வாக ஆசிரியர்

# 5. தான்ய லக்ஷ்மீ - எட்டு கைகள்

வரதாபய ஸம்யுக்தாம் கிரீட மகுடோஜ்வலாம்!
அம்புஜம் சேக்ஷுசாலீம் வா கதளீபல த்ரோணிகாம்!
பங்கஜம் தக்ஷவாமே து ததானும் சுக்ல ருபிணீம்!
க்ருபாமூர்த்திம் ஜடாஜூடாம் சுகாஸந ஸமன்விதாம்!
ஸர்வாலங்கார ஸம்யுக்தாம் ஸர்வாபரண பூஷிதாம்!
மத மத்தாம் மனோஹாரிருபாம் தான்ய ச்ரியம் பஜே!!

வரதம், அபயம் என இரண்டு கைகளையுடையவளும், இரண்டு கைகளில் இரண்டு தாமரைகளையும் தரிப்பவளும் மற்றக் கைகளில் கரும்பு, நெற்கதிர், வாழைப்பழச் சீப்பு, கிண்ணம், இவைகளைத் தாங்குகின்றவளும், வெண்மையான உருவமுடைய வளும், தயவே வுருவெடுத்தவளும், சடைகளால் அலங்கரிக்கப் பெற்றவளும், சுகாஸனத்தில் வீற்றிருப்பவளும், பல அலங்கா ரங்களோடு கூடினவளும், மதச்செறுக்கடைந்தவளும், மனதை யிழுக்கக் கூடிய உருவத்தையுடையவளுமாகிய தான்ய லக்ஷ்மியை வணங்குகிறேன்.

மாறுதல் - குறிப்பு

1. உட்கார்ந்த உருவம்
2. இரண்டு பக்கத்திலும் இரண்டு சக்திகள்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும்,
ஸ்ரீ காசிமடம் ஜூனியர் வித்துவான் ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும்
ஸ்ரீவைகுண்டம் திரு. டி. எம். குமரகுருபரன் பிள்ளையும், பிறரும்

# நீதிநெறி விளக்கம்

(கட்டுரை 7)

தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்
சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்
ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,
காஞ்சிபுரம்.

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான் — மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு.

"சரசுவதியின் வாழ்வு முகத்தின் இடத்ததாகப்பெறினும் பிரமதேவர் சிறந்த தமிழ்அறிஞர்க்குச் சமம் ஆகமாட்டார். பிரம தேவராற் செய்யப்பட்ட வெறிய உடம்புகள் அழியுந்தன்மை உடையனவாகும். தமிழறிஞர் புகழாற் செய்யும் உடம்புகள் அழிதல் மாலைய அல்ல."

தமிழ்ப்புலவர் பிரமதேவரினும் மிக்கவர் என்பது கருத்து.

பிரமதேவர்க்கும் தமிழ்ப் புலவர்க்கும் தொழில்பற்றி வேற்றுமை கூறுதலால் இது தொழில் வேற்றுமையணி. மண், நீர் முதலிய பூதங்களால் ஆயது என்பது அறிவித்தற்கு வெற்றுடம்பு என்றார். போல் - அசை.

இது சுன்னுகப் பெரும்புலவர் உரை. மற்றோருரையில்,

“சரசுவதியின் வாழ்தல் தன் முகத்தினிடத்து உள்ளதாய் இருந்தாலும் பிரமனுனவன் வளப்பமாகிய தமிழ்ப் புலவர்க்கு ஒப்பாகான். ஏன்எனில், இத் தமிழ்ப்புலவர் புகழால் உண்டாக்கு கின்ற உடம்புகள் பிரமன் படைக்கும் பயன்படா வுடம்புகள் இறப்பனபோல் இறக்கமாட்டா.” ‘மற்று – அசை.’

இவ்வுரையில் உள்ள இலக்கணக் குறிப்புக்கள் பலவுள. அவற்றுள் சில இவை:— “செய் – நிகழ்கால வினைத்தொகை. “முக்காலத்தினும் ஒத்தியல் பொருளைச் செப்புவர் நிகழுங் காலத்தானே” என்பது விதி. இதில் முன் வாக்கியத்தைப் பின் வாக்கியத்தால் சமத்காரமாய்ச் சாதித்தமையால் ஏது வணி. வேற்றுமையணியும் கலப்பு.”

முன்னுரையில் (மாய்வன)போல் – அசை. இவ்வுரையில் மற்று அசை, அணியில் வேறென்றும் இதிற் கூறப்பட்டது.

‘புலவர் பெருமை கூறப்படும். முகம் என்றது நாவை. மலரவன் – பிரமன். வண்தமிழோர் (வள்–தமிழோர்) – நூற் செல்வத்தைப் பிறர்க்கு உதவும் வண்மையை யுடைய தமிழ்ப் புலவர். வெற்றுடம்பு – உயிர் நீப்பின் தனக்கென ஒரு பெருமை யும் இல்லாத உடம்பு. ‘இவர் செய்யும் உடம்பு’ என்றது நூல்களை.

“எழுவகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்.”

என்று நன்னூலார் புலவரது படைப்பை உடலோடு ஒப்பிடுதல் இங்கே நினைத்தற்குரியது. பிரமனைக் காட்டிலும் புலவர் தம் நெஞ்சிற்கு அணியர் ஆதலின், இவர் எனச் சுட்டினர். மாயா என்றது நிலைபெறும் என்னும் பொருளில் நின்றது. புகழ் கொண்டு நிலைபெறும் என்றவாறு.

புலவர்களைப் போலவே கலைமகளைத் தன்பாற் பெற்ற பிர மனது படைப்பு, புகழைப் பெறுமலே அழிந்து விடும். புலவர் படைப்போ புகழைப் பெறுதலோடு அழியாமலும் நிற்கும் என்றார். இது வேற்றுமையணி (இது தமிழ்த் தெய்வப்பதிப்பின் குறிப்பு)

இதில் ஊன்றி நோக்கற்பாலது 'புகழ் கொண்டு நிலை பெறும்' என்றது. முன்னுரையில், புகழ் கொண்டு என்றது செய்யும் உடம்பு என்றதொடு சார்ந்து நிற்றலையும், இவ்வுரையில் மாயா என்ற தொடு சார்ந்து நிற்றலையும் அறிக. மாயா என்றதன் பொருள் 'நிலைபெறும்' என்பதாதலின் அவ்வாறு அந்நுவயம் செய்து பொருள் கொள்ளப்பட்டது. கொண்டு செய்யும் உடம்பு என்று பாட்டில் இருப்பினும் புகழ் கொண்டு மாயா எனக் கூட்டிப் புகழ் கொண்டு நிலைபெறும் என்றது விருந்தே. மலரவன் செய் வெற்றுடம்பு மாய்வன போல் புகழ் கொண்டு மாயா என்று (செய்யுளில் உள்ளவாறு சொற்களைக் கொள்ளாது) மாற்றிப் பொருள் கொள்ளின், மலரவன் செய்யும் வெற்றுடம்பு புகழ் கொண்டு மாயும். அவை போலப் புலவர் செய்யும் உடம்பு புகழ் கொண்டு மாயா என்று பொருள் கொள்ள நேரும். அவ்வாறு நேராதிருக்க மாயா என்றது நிலைபெறும் என்னும் பொருளில் நின்றது, என முன்னரே எழுதியிருப்பதால், இவ்வாறு அநர்த்தம் உண்டாக வழியில்லை. இப்படி முட்டுப்படும் நிலையில், செய்யுள் அமைதலும் உண்டு. இச் செய்யுள் அப்படி அமைந்ததன்று. புகழ் கொண்டு செய்யும் உடம்பு என்பதே ஆசிரியர் கருத்து. புலவர் செய்யும் உடம்பு புகழால் நிலை பெறும் என்னும் உண்மையை விளக்க வேண்டிப், புகழ் கொண்டு மாயா என அந்நுவயித்து, மாயாமை நிலைபேறு என்னும் பொருளது ஆதலை முற் குறித்து, அங்கனம் வைத்துக் கொண்ட பொருளுக்குக் கருத்து, 'புகழ் கொண்டு நிலைபெறும்' எனக் கூறப்பட்டது புலவர்க்குப் புதியதொரு பெரு விருந்தே யாகும்.

மற்றொரு குறிப்புரை இதற்கு முந்தியெழுதப்பட்டுள்ளது. அதில், 'வாழ்க்கை — வாழ்வு. முகத்தது — முகத்திலுள்ளது. மண்புனல் தீவளி வெளி என்னும் ஐம்பூதமயம் ஆதலின் பிரமன் செய்யும் உடம்பு வெற்றுடம்பு எனப்பட்டது. புகழ் கொண்டு வண்டமிழோர் செய்யும் உடம்புகள் மலரவன் செய்வெற்றுடம்பு மாய்வன போல மாயா ஆதலின் மலரவன் வண்டமிழோர்க்கு ஒவ்வான் என்க, போல் அசையென்பாருமுளர்'; என்றுளது.

நீதிநெறிவிளக்கம் விருத்தியுரையில், "சரசுவதி முகத்தினிடத்து வாழ்தல் இருவர்க்கும் ஒத்ததேயானாலும் பிரமன்

வண்மையை யுடைய தமிழ்ப் புலவோர்க்கு ஒருவாற்ருன் ஒப்பா கான். எவ்வாற்ருன் எனில், தமிழ்ப் புலவராகிய இவர் (தம்) புகழ் முலமாக(ப்) படைக்கின்ற உடம்பு அப்பிரமன் படைக்கும் பயன் இன்மையையுடைய உடம்பு இறப்பது போல இறத்தல் இல'' என்றுளது பதவுரை.

பிரமனும் புலவரும் கலைமகள் வாழ்க்கையை தம்மிடத்து அடைந்தவராயினும், பிரமன் செய்யும் உடம்பு மாயா ஆதலால் பிரமனிலும் புலவரே சிறப்புடையர் என்பதாம் (தொகுத்துரை.)

இவ்வாறு உரை வேறுபாடு இவ்வெண்பாவிற்கு அமைந் தது. இவற்ருல் அறிஞர்க்கு ஓர் உணர்வு தோன்ருதிராது. நூலாசிரியர் கருதிய கருத்தை உரையாசிரியர் உள்ளவாறு ரைப்பது அரிது. எளிதன்று என்பது அத்தோற்றம் (உணர்வு).

கலைமகள்—நாமகள் முதலியவை கல்விக்குரிய தேவியைக் குறித்த பெயர்கள். பிரமன் நாவில் கலைமகள் உறைவள். முகம் என்றது வடமொழியில் வாயைக் குறிப்பது, வாயைக் குறிப் பினும் ஈண்டு நாவைக் கொள்ளலே தக்கது, வாக்குத்தேவி என்றது நாவுறுப்பைக் குறித்தும் வாயைக் குறித்தும் அன்று, நாவும் வாயும் அல்லாதது வாக்கே. அவ்வாக்கிற்கு இறைவி, 'வாகிசுவரி'யாக விளங்கும் இறைவி பராசத்தி. அவளது பல்லா யிரங் கூற்றுள் ஒரு கூறு சரசுவதியாகிய வாக்குத் தெய்வம். அது உள்ளிருந்து வெளிப்படும் போது வாயும் நாவும் கூடிய ஒருறுப்பு வழியாகின்றது. வாயும் நாவும் இருந்தும் ஊமை யாதலை நோக்கின், 'வாக்கு' வேறு என்றறியலாம். கருமேந்திரி யங்களுள் ஒன்ருய வாக்கு 'வசனித்தல்' என்னும் கருமத்தைச் செய்யும் பொறி. வசனித்தல் ஓசை யுருவானது. அத்தொழிலைச் செய்யும் தத்துவம், நாவாயின் இடத்துநின்று அவ்வசனத்தை நிகழ்த்தும் பொறி. அது கருமப்பொறி. ஞானப்பொறியன்று. அப்பொறிக்கு இடமாகிய உறுப்பின் வழியா வெளிப்படும் ஒரு சக்தியே வாக்தேவி, அத் தேவியைக் கலைமகள், நாமகள், சரசுவதி முதலாகப் பலபெயராற் குறிப்பர். அவள் முகத்தில் வாழ்கின்ருள் நாவில் வாழ்கின்ருள் என்றே பொருள் கொள்ளல் தக்கது. முஞ்சில் வாழ்கின்ருள் என்பது தவறன்று, பொருத்த மாக திருமகளை முகத்தில் வாழ்கின்ருள் என்பது இருவகை

வழக்கிலும் உண்டு. அகத்திருக்குங் கல்வியை முகத்திருக்குங் கண் அறிவிக்கின்றது எனல் உண்டு. ஆசிரியர், குமரகுருபரர், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழிலே, கலைமகள் காப்பிலே,

"துறைபட்ட மறையவன் செந்நாப் படிந்துதன்
சுதைநிறஞ் சிதைவுறுமே
தொன்மறை கனிந்தூறும் அண்பல்நீர் ஊறலின்
தூத்துகில் நனைப்புறுமே
நறைபட்ட வெண்டோட்டு நளினப் பொகுட்டெமது
நன்னெஞ் செனக்குடிபுகும்
ஞானப் பிராட்டியைச் சொற்கடற் றெள்ளமுதை
நாத்தழும் பத்துதிப்பாம்."

என்னும் பாடற்பகுதியில் நாவிற்படிதல் கூறப்பட்டது. முஞ்சு முஞ்சி எனத் தமிழிற் கூறப்படும் முகம் கூறப்பட்டிலது. 'அழுமுஞ்சி' என்பது தமிழ்ச்சொற்றொடர். முஞ்சூறு (முகம் உற்ற ஓர் உயிர்) என்று ஒன்றன்பெயர் பலர்க்குத் தெரியும். முஞ்சியூறு என்றில்லை. முஞ்சு+உறு=முஞ்சூறு. உறு — ஊறு என நீண்டது. இடை+உறு=இடையூறு என்றாயினதுபோல அது முதனிலை நீண்ட தொழிற்பெயரும் ஆகுபெயருமாம்.

'தொண்டர் செந்நாவின் நின்று காக்குங் கருணைக்கடலே சகலகலாவல்லியே' 'அஞ்சத்துவசம் உயர்த்தோன் செந்நாவும் அகமும் வெள்ளைக் கஞ்சத்தவிசு ஒத்திருந்தாய் சகலகலா வல்லியே,' என்பவற்றில் கலைமகள் வாழ்வு அடியார் நாவும் அகமுடையான் நாவும் ஆகிய ஈரிடத்தும் உண்டு என்றறிதுணர்க. முகம் முஞ்சு அன்று என்று இவற்றால் தெரியலாயிற்று. நீதிநெறி விளக்கத்தில் முகத்தது என்றதற்கு நாவினிடத்தது எனலே தக்கது, தகவே, தமிழ்த் தெய்வத்தின் பதிப்பிலுள்ள குறிப்புரையில் தொடக்கத்தே 'முகம் என்றது நாவை' என்றெழுதியது உண்மையாதலை உணர்க.

(தொடரும்)



# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உ ரை ந டை



பாலகவி வயிநாகரம்,

திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,

தேவகோட்டை.



(மலர் 17. இதழ் 12-ன் தொடர்ச்சி)

தருமன்னு பொன்னுலகு மண்ணுலகு மொக்கத்
தலைத்தலை மயங்கத்தொகும்
சன்னிதி யடைந்தவர்கள் பையுளேய் முற்றும்
தவிர்ந்தக மகிழ்ந்துதவி ராக்

கருமன்னு முழிப் பெரும்பிணியு மாற்றிடுதல்
கண்டனை யிருத்தியானின்
கயரோக முடன்முயற் கறையுந் துடைத்திடக்
கருதிடுதி யேயெம்பிரான்

திருமுன்ன ரள்ளியிடு வெண்சாந்து மற்றைத்
திருச்சாந்து நிற்கவற்றுச்
சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்குறுந்
திவலையொன் றேயமையுமால்

அருவென்ன வுருவென்ன வன்றென்ன நின்றவனொ
டம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 66

கற்பகதரு முதலிய தெய்வ மரங்கள் பொருந்திய விண்ணுலகத்தினரும் இந்த நிலவுலகத்தினரும் ஒன்று சேர்ந்து ஆங்காங்கே கலந்து கூடியிருக்கும் இவனது சந்நிதியை அடைந்தவர்கள், தமக்கு வந்த துன்பந் தருகின்ற நோய் முழுவதும் நீங்கப் பெற்று மனமகிழ்ந்து, நீங்காத கருவிலே பொருந்துகின்ற பல்லூழிக் காலத்துப் பெரும்பிணியும் மாறப்

பெறுவதை நீ பார்த்திருக்கின்றாய். உனக்குள்ள கய ரோகத்துடன் முயலாகிய களங்கத்தையும் போக்கிக் கொள்ளக் கருதுவாயானால் எமது தலைவனாகிய இவனது சந்நிதியில் அள்ளியிடுகின்ற திருவெண்ணீறும் மற்றுமுள்ள திருமண் சாந்தும் இவற்றுடன் என்றும் வற்றாத சித்தாமிர்தப் பெருந் தீர்த்தத்தின் குறுந்திவலை ஒன்றுமே அதற்குப் போதியதாக அமையும். அருவமெனவும் உருவமெனவும் இவற்றைக் கடந்த சொருபமெனவும் நின்றவனோடு சந்திரனே! விளையாட வருவாயாக. அழகு பொலிகின்ற கந்தபுரிப்பதி தழையும்படி வந்துள்ள கந்தப் பெருமானுடன் சந்திரனே! விளையாட வருவாயாக.

ஒழியாத புவனத் துயிர்க்குயிர தாய்நிற்ப
தொருதெய்வ முண்டெனவெடுத்
துரையா லுணர்த்துவதை யொழியவெவ ரெவர்கட்கும்
ஊன்கண் ணுளக்கண்ணதாம்

விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரங்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வமித் தெய்வமல் லாற்புவியில்
வேறில்லை யென்றுணர்தியாற்

பொழியாத புயறங்கு புவனமுந் திசைமுகப்
புத்தேன் பெரும்புவனமும்
பொன்னுலகு மண்ணுலகு மெவ்வுலகு வேண்டினும்
பொருளன் றிவற்குமற்ற

அழியாத வீடுந் தரக்கடவ னிவனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 67

புவனங்களில் நீங்காதிருக்கின்ற எல்லா உயிர்களுக்கும் உயிராகி நிற்கும் ஒரு கடவுள் உண்டென்று எடுத்துச் சொல்லால் உணர்த்துவதை யல்லாமல் யார் யாருக்கும் புறக்கண் அகக்கண்கள் பொருந்திய விழியாகி நின்று காட்ட முன்னே தோன்றி நின்று குளிர்ந்த திருவருளைச் சுரந்து, அவர்கள் வேண்டிய வரத்தைக் கொடுப்பவனும் மெய்கண்ட தெய்வமும்

இத் தெய்வமல்லாமல் பூவுலகத்தில் வேறு தெய்வமில்லையென்று உணருவாயாக. மழை பொழியாத புயலாகிய திருமால் தங்கியிருக்கின்ற வைகுந்த உலகமும் நான்முகக் கடவுளது பெரிய சத்திய உலகமும் வானவர் உலகமும் நிலவுலகமும் மற்ற எந்த உலகமும் வேண்டுமாயினும் இவனுக்கு அவை பொருளாக மாட்டா. மேலும், என்றும் அழியாத மோட்சத்தையும் தருவான். இவனுடன் சந்திரனே! விளையாட வருவாயாக. அழகு பொலிகின்ற கந்தபுரிப் பதிதழையும்படி வந்துள்ள கந்தப் பெருமானுடன் சந்திரனே! விளையாட வருவாயாக.

(தொடரும்)

---

## இறைவன் தாள்.

பல்லவி

இறைவன்தாள் பணிவோமே! — உலகில்
அவன்திரு அருளா லனைவரும் வாழ (இறை)

அனுபல்லவி

ஆதி பகவனென ஓதிடு மவன்பெயர்
சோதி வடிவான சொற்பொருள் உருவான (இறை)

சரணம்

கற்றதன் பயனென நற்றாள் தொழுதால்
பற்றும் பலபிறவி அற்று அழிந்துவிடும்
இருள்சே ரிருவினையு மில்லா தழிந்து
மருளும் மனக்கவலை மாண்டு மடிந்துவிடும்
பிறவிப் பெருங்கடலுந் தாண்டுதலு மியலும்
வறுமைத் துயர்கெடவும் வழிதனைக் காட்டிவிடும்.
(இறைவன் தாள்)

புலவர். வே. அரசு.

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

---

மலர் 17, இதழ் 12-ன் தொடர்ச்சி

### The Lord is unto the gentle rain

### இறைவன் மழை போன்றவன்

135. தூரறிவாளர் துணைவர்; நினைப்பிலர்
பாரறிவாளர் படுபயன் தானுண்பர்;
காரறிவாளர் கலந்து பிறப்பர்கள்;
நீரறிவார் நெடு மாமுகிலாமே.

Who seeketh the Finite Truth
He is their Friend;
Who doth not seek Him
They but knoweth the Worldly Men's Misery Way
Enveloped in the darkness of bondage
They vainly shall be born again and again;
Who seeketh the Path True
To them the Lord is unto the richly Laden clouds
That droppeth the gentle rain of Heavenly Grace.

அடிப்படை ஞானத்தை நாடுகிறவர்களுக்கு இறைவன் துணைவனுக அமைகின்ருன். அவனை எண்ணுதவர்களோ, உலகத்தோர் படும் துன்பத்தையே அடைவார்கள். பாச இருளையே

அறிந்தவர்கள் மீண்டும் மீண்டும் பிறந்து கொண்டே இருப்பார்கள். ஞானநெறியில் செல்பவர்க்கோ அவன் அருள் மழையைப் பொழிவிக்கும் கொண்டல் போன்ற வள்ளன்மை கொண்டவனுயிருக்கின்றான்.

குறிப்பு: வரி. 1 தூர் – அடிப்படை ஞானம்.
3 கார் – இருள் – பாசம்.
4 நீர் – செவ்விய ஞானநெறி.

## The Lord is unto the Life-Boat

### இறைவன் உயிர்த்தோணி போன்றவன்

136. அறிவுடன் கூடி அழைத்த தோர் தோணி
பறிவுடன் பாரம் பழம்பதி சிந்தும்
குறியது கண்டும் கொடுவினையாளர்
செறிய நினைக்கிலர் சேவடிதானே.

The Boat of Life
By Divine Wisdom guided
Dischargeth quick its Cargo
At the City Ancient;
Having seen that unerring prospect
These wretched men of ignoble deeds
Thinketh not of His Holy Feet,
In devotion replete.

ஞானநெறியிலே செலுத்தியதோணி, கன்மவினையென்னும் பாரத்தை இறைவன் திருவடியாம் பழம் பட்டினத்திலே இறக்கி விடுகின்றது. அவ்வாறு நடைபெறுவதைக் கண்டிருந்தும், கொடிய வினைச்சுமையைத் தாங்கிச் செல்வோர் இறைவன் திரு வடியை மனமாரச் சிந்திக்கின்றாரில்லையே.

(தொடரும்)



# Why I became a Vegetarian ?

**H. H. The Dalai Lama**

"Do not harm others as you would not want others to harm you," says a Tibetan proverb. It is not oneself alone but all sentient beings that are afflicted by sufferings.

Man is attached to his near and dear ones and his belongings in as much as he is attached to himself. There is a natural impulse to react and to protect the sanctuary of his happiness and comfort when faced with external threat.

The same kind of characteristic pervades the animal kingdom although a large part of the sophisticated modern world tends to regard this realm of dumb creatures as an object of apathy.

It is not only the beings of a higher plane but even the tiniest creature experiences and therefore shuns suffering and seeks comfort and happiness.

To deprive these creatures the natural right to subsist, is a violation of the ethical values. Buddha's teaching forbids the taking of life of any living being, ranging from man to the smallest insect whether directly or indirectly. This moral "not to take life" is the very first prohibition enunciated by the Blessed One.

---

Reproduction-with the kind permission of Bharatiya Vidya Bhavan, Bombay.

My determination to become a vegetarian was influenced by purely personal reasons. Neither it has to do anything with any set dogmas of vegetarianism nor just because a particular sect of people is doing so, I have taken to emulation.

It may be pointed out here that the followers of vegetarianism differ as to strictness of observance.

Apparently there was nothing spectacular or amazing in the contributing factors that brought a change in my food habit. The incidents were insignificant but of which I happen to be a momentary spectator.

During the Indo-Pakistan conflict last year, I had to spend a major portion of the autumn season touring the southern States of India. While motoring through places, whether it be urban or rural areas, it was a common sight to see fowls, dogs and cats and so on running with all the haste and as fast as their legs would carry, mortally fearing that its life was in jeopardy.

No one will deny that death is suffering. The accompanying feeling occasioned by these sights was one of pity and mental agony.

And, again at the time of my sojourn in Kerala, I just happened to see a fowl being slaughtered to provide table delicacy for someone. It was starkly horrible to feel the terrible fear, pain and torture experienced by the innocent fowl. Life is dear to everybody. How that poor helpless bird must have suffered in agony and fear when its life was being destroyed! I shudder to think of it.

And at that moment I realised with the fullest intensity and in all its stark reality the full force of the significance of the moral "not to take life." I was overwhelmed with pity and compassion for the poor, dumb fowl being done to death.

Another factor which made me to abstain from taking meat was the discovery of the fact that in all the places that we visit, the host of that particular place of boarding, slaughters fowls and sheep especially for the consumption of members of my party and myself. Of course, it was done with all the good intentions of doing good to me. But I could not bear to eat the fowl which has been butchered especially for my consumption.

All these led me to make a resolve to make vegetable foods the sole or principal article of my diet, to the exclusion of all meat or flesh. I am determined to remain so, all through my life.

The progress of science and technology has brought about manifold increases in man's comforts and amenities. Man's ingenuity and skill have reached such height of perfection that he is able to produce virtually everything gratifying to his wants I do not see any reason why animals should be slaughtered to serve as human diet when there are so many substitutes. After all man can live without meat. It is only some carnivorous animals that have to subsist on flesh.

Killing animals for sport, for pleasure, for adventure, and for hides and furs is a phenomenon which is at once disgusting and distressing. There is no justification for indulging in such acts of brutality. It is a disgrace to the faculty of reasoning—the power to

think rationally—which every man is endowed with, and which verily is the quality that distinguishes him from the beast.

Generally speaking, the Tibetan people are non-vegetarians. They are so more by necessity than by an intentional contradiction of their professed creed.

The geographical and climatic conditions of Tibet are such that, for the most part, cultivation of vegetable crops is not possible. The conspicuous absence of vegetable crops makes the people lean heavily on the consumption of meat and other allied products. In the vast windswept lonely northern plateaus of Tibet, vegetable is a rare delicacy. Even then the Tibetans forego meat during the whole month of Vaishaki Purnima, and on the 8th, 15th and 30th day of every Tibetan month.

In India the conditions are quite different. The abundance of vegetable crops makes it possible for the people to exclude meat diet.

Nature is only a source of sustenance to creatures, but not their guardian in the sense that nature can shield them from external injury and harm. Man is a superior being because he possesses the intellect and the power to reason. I believe, therefore, human beings are the only agents who are capable of, if it is not their bounden duty, to give protection to the animals. Instead of butchering, animals should be loved, protected and cared for. Little acts of kindness like saving a fish from a drying pond would not cost us anything.

According to the Buddhist theory of Universe, Samsara is divided into divisions of which the division of Animals forms a part. The suffering of animals arises for the most part from the absence of the power of thinking and reasoning, and their dumbness and ignorance. But man is not so.

To be born as a human being is a rare opportunity. We ought to make a good use of this privilege of being born in a human form.

Cultivating love and compassion for all that breathes, and with a mind set on liberating the beings from the ocean of Samsara, we have to work our way towards the attainment of Buddhahood.

Of all the factors that influenced me most, was the element of retribution. As you sow, so you will reap. Every action has its corresponding result. If one does injury or harm to others, one will have to suffer the same fate. This is the Universal Law of Causation and Effect.

Lord Buddha has ordained that cultivation of love and compassion to all sentient beings is of utmost importance to the creation of a peaceful world order.

The emphasis is as much on the activities of the human being as it is with relation to the realm of our dumb animal friends.

The Lankavatra Sutra says: "All beings—whether human or animals—are interlinked as kinsmen and relatives under the effect of the eternal operation of each one's Karma. As one would not eat the flesh of one's own relatives, eating of flesh should be avoided,

All the animals are to be treated as one's brothers and sisters. Sages and saints, realising that eating of flesh would be an obstruction to the cultivation and perfection of the quality of love and compassion, abstain from taking meat. Similarly, eating of meat is an obstruction to the acquirement of Tantric power".

Our animal friends are to be loved and cared for. They exist not for our sake or for our sustenance but to contribute their share, in their own peculiar way, to the beauty and happiness of this world.

---

## குறள் காட்டும் வழி.

பல்லவி

குறள்காட்டும் வழிநடப்பாய் — குழந்தாய்!
மன இருள்போக்கும் மார்க்கமது — திருக் (குறள்)

அனுபல்லவி

வள்ளுவன் சொன்னமொழி இன்னலைப் போக்கும்வழி
தள்ளமுடி யாநீதி தந்திடும் நல்லமதி (குறள்)

சரணம்

உள்ளதை இல்லையென்று லுலகம் நல்லதை அடையாது
உள்ளிய தடைவதென்று லுள்ளந்தா னுறுதிபெற வேண்டும்
— குழந்தாய்! (குறள்)

பணிவுடமை அன்போ டின்சொல்லு முலகிற்
கனியென அறிவாய்நீ — துணிவுடன்
வாய்மையைக் கைப்பற்றி வாழத்தொடங்கி விட்டால்
தூய்மையைப் பெறுவாய்நீ — குழந்தாய்! (குறள்)

புலவர். வே. அரசு.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

## திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் கேதாரமந்திர் முகப்பில்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஜூனியர் வித்துவான் ஸ்ரீலஸ்ரீ
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுடன்,
ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம் பரம்பரை டிரஸ்டி
திரு. டி. எம். குமரகுருபரன் பிள்ளை.

# மாணவர் குறிக்கோள்*

திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, B. A., B. T., அவர்கள்,
முன்னை ஆணையாளர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்,

---

மக்கட்கெல்லாம் ஒரு குறிக்கோள் — கூடியவரையில் உயர்வாகிய குறிக்கோள் — இன்றியமையாதது. அவர்கள் குறிக்கோளின் உயர்வையும் அதையடைய அவர்கள் செய்யும் முயற்சியின் திறத்தையும் நோக்கியே மக்கட்கூட்டத்தில் அவர்கட்குக் கிடைக்கும் பெருமையின் அளவு அமையும்.

"மனிதரில் தலையாய மனிதர்" மிக உயர்ந்த குறிக்கோளைக் கொண்டு வாழ்க்கை நடத்துவர். இடைப் பட்டவரும், கடைப் பட்டவரும், குறைந்ததும், மிகக் குறைந்ததுமான குறிக்கோளை யுடையாராவார். "என்னுலறியாப் பதம் தந்தாய் யானதறியாதே கெட்டேன்," என்றும், "குறிக்கோளிலாது கெட்டேன்.' என்றும் நம் சமயாசாரியார்களில் இருவர் பாடி யுள்ளனர். அது உயர்நிலை யடைந்த அவர்கட்குப் பொருந்துவதாகாது.

"எல்லோரும் சமம்" என்று பொதுப்பட பேசினுலும், ஆன்மீகப் பண்பாட்டு வளர்ச்சியில் ஏற்றத் தாழ்வு உள்ளதென்பதை மறுத்தற்கியலாது. கல் மனிதர், மரமனிதர், விலங்கு மனிதர், மானிட மனிதர், தேவமனிதர் என்று இத்தலை முறையில் நம் நாட்டு ஞானியொருவர் மக்களைப் பாகுபடுத்திப் பேசினர். "மாவும் மாக்களும் ஐயறிவினவே" என்ற தொல்காப்பியச் சூத்திரமும் உண்மையே. எனினும் கீழ்ப் படிகளிலுள்ளோர் யாவரும் முறையே மேற் படிகளில் ஏறித் தலையாய மனிதராக வேண்டும் என்பதுதான் உலகப் படைப்பின் நோக்கம்.

---

* சென்னை மாணவர் மன்ற வெள்ளி விழா மலருக்கு அளிக்கப்பட்ட கட்டுரை எழுதியவரின் சம்மதம் பெற்று இம்மலரில் சேர்க்கப்பட்டுள்ளது.

மாணவர்கள் தலையாய மனிதராய் வளர்ச்சியடைவதைத் தம் குறிக்கோளாகக் கொள்ளவேண்டும். இதனை இளமைப் பருவத்தில் அவர்களே தெரிந்து அமைத்துக்கொள்ள இயலாது. "மாண்" என்பதற்கு மாட்சிமை, பெருமை, மகிமை என்பது பொருள். 'மாணவர்' என்ருல் மாட்சிமைக்கு உரியவர்; அதைத் தேடிக்கொள்பவர் என்று பொருள். உடல் மாட்சி, உரைமாட்சி, உள்ளமாட்சி இம்மூன்றும் வளரவேண்டும்.

இவ்வளர்ச்சியில் பெற்ருேர்க்கும் பெரும் பங்கும் பொறுப்பும் உண்டு. அடுத்த படியாக ஆசிரியர்கட்கும் பொறுப்புண்டு. "Childhood shows the man as the morning shows the day" என்ருர் ஆங்கில மகாகவி மில்டன். "Children have more need for models than critics" என்ருர் ஜௌபெர்ட். சிவபாத இருதயரும் பகவதி அம்மையாரும் செய்த தவத்தால் திருஞானசம்பந்தர் வந்து அவதரித்ததையும், ஜிஜிபாய் பவானி தேவியை நோக்கிச் செய்த தவத்தால் வீர சிவாஜி அவதரித்ததையும் இவைபோன்ற இன்னும் பல சான்றுகளையும் உற்று நோக்கினுல், பெற்ருேர் பொறுப்பு, கருவடைதற்கு முன்னமே தொடங்கி, கருவுற்ற நாண் முதலாகவும், பிள்ளைப் பேற்றின் பிறகும் தொடர்ந்து வருகின்றதென்னும் உண்மையை உணரலாம்.

பச்சிளம் குழவியாயிருக்கும் போதே அதன் அறிவு வ்ளரத் தலைப்படுகின்றதென்று இக்கால மனநூல் ஆசிரியர்களும் கூறுகின்றனர். பள்ளிப் படிப்புத் தொடங்கு முன்னரே பிள்ளையின் அறிவாற்றல் ஓரளவு வளர்ந்துவிடுகிறது என்பது தேற்றம். எனவே, அன்னையும் பிதாவும் முன்னறியாசிரியர்களாயிருக்கிருர்கள். பின்புதான் பள்ளியாசிரியர் வருகிருர். இருதிறத்தாரும் அறிவுடன் ஒத்துழைத்தால்தான் பிள்ளையின் அறிவும் பண்பும் நன்முறையில் வளரும்; நல்ல குறிக்கோள்கள் தோன்றி நிலைபெறும்.

இப்படி வளர்கையில் கல்வி கேள்விகள் இன்றியமையாத மாபெரும் சாதனங்களாக உதவுகின்றன. "கல்லாத முடரைக் காணவும் ஆகாது," "கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்," "கற்றவர் விழுங்கும் கற்பகக் கனி," "கற்று முற்றினுர்

தொழும் கழுமலம்,'' என்பன போன்ற அருளாளர் திருவாக்குக்கள் பலவுள. "விலங்கொடு மக்களனையர் இலங்கு நூல் கற்றுரோடு ஏனையவர்'' என்ற பொது மறைத் திருவாக்கையும் இங்குன்னுதல் சிறப்பாம். இது பொது விதி.

கல்வியின் நோக்கத்தைப்பற்றிச் சுவாமி விவேகானந்தர் "The end of all education, all training, should be man-making" என்று கூறினுர். "True education is that which draws out and stimulates the spiritual, intellectual and physical faculties of the children" என்று மகாத்மா காந்தி இவ்வுண்மையைச் சற்று விவரித்துரைத்தார்.

கல்வியின் நோக்கத்தைப்பற்றி நம் தமிழகத்துச் சான்றோர்களிற் பலர் திட்ட வட்டமாகப் பற்பல நூற்றுண்டுகட்கு முன்னரே பாடியுள்ளனர். "கற்றதனுலாய பயனென்கொல்'' என வினவித் தொடங்கும் இரண்டாம் திருக்குறளே, கல்வியின் முடிந்த பயனைக் கூறிவிட்டது.

பல நூற்றுண்டின் பின்னர்த் தோன்றிய நன்னூல், ஒரு சூத்திரத்தில், கல்வியின் முழுப் பயனையும் களங்கமறத் தெரிவித்துவிட்டது. அதுதான், "அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற் பயனே'' என்பது. இக்கால அறிஞர்கள் பலபட விரித்துக் கூறும் கல்விப் பகுதிகள் யாவும் இச்சூத்திரத்தில் அடங்கியுள்ளன. அவர்கள் வற்புறுத்தத் துணியாத பேருண்மை ஒன்றும் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. முதலில் அரச குமாரனுகிய வீதிவிடங்கன் கற்ற கல்வியினியல்பைப்பற்றித் தெய்வச் சேக்கிழார் கூறுவதைக் காண்போம்.

"தவம்முயன் றரிதில் பெற்ற தனியிளங் குமரன் நாளும்
சிவம்முயன் றடைந்து தெய்வக் கலைபலதிருந்த ஓதிக்
கவனவாம் புரவியானை தேர்படைத் தொழில்கள் கற்றுப்
பவம்முயன் றதுவும் பேறே எனவரும் பண்பில் மிக்கான்,''

'அளவில்தொல் கலைகள் முற்றி, அரும்பெறல் தந்தை மிக்க
உளம்மகிழ் காதல் கூர ஓங்கிய குணத்தால் நீடி,
இளவர சென்னும் தன்மை எய்துதற் கணிய ஞகி,''

என்று விவரிக்கின்ருர். அரசர்க்குரிய போர்த்தொழிலோடு பிறப் பல கலைகளேயும் திருந்த ஓதினுன்; நாளும் சிவம் முயன்றடைந் தான்; ஓங்கிய குணத்தால் நீடினுன். எவ்வளவு சிறப்பான கல்வி இது!

இனி, மாமாத்திரர் குலத்து வந்த பரஞ்சோதியார் கற்ற கலைகளேப் பற்றி,

"ஆயுள்வேதக் கலையும் அலகில் வடநூற் கலையும்
தூயபடைக் கலத்தொழிலும் துறை நிரம்பப் பயின்று,"

என்றும்,

"உள்ளநிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்ருல்
தெள்ளிவடித் தறிந்த பொருள் சிவன்கழலிற் செறிவுஎன்றே
கொள்ளும்உணர் வினில்முன்னே கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாயென்றும் பயின்றுவரும் பண்புடையார்,"

என்றும் படிக்கின்ருேம். மேலே குறித்த சான்றுகளை இது பெரிதும் ஒத்திருப்பது வெளிப்படை. மற்றும் அந்தணர் குலத் துதித்த சண்டேசர் கற்ற கல்வியைப் பற்றி,

"குலவு மறையும் பலகலையும் கொளுத்து வதன்முன் கொண்டமைத்து
நிலவும் உணர்வின் திறங்கண்டு நிறுவும் மறையோர் அதிசயித்தார்
அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடுங் கழலே எனக்கொண்ட
செலவு மிகுந்த சிந்தையினில் தெளிந்தார் சிறிய பெருந்தகையார்"

என்றறிகின்ருேம்.

இவற்ருல் வாலறிவன் நற்ருளேப் பற்றி நன்க றிந்து அதனை அன்புடன் தொழுவதே உண்மையான கல்விக்கு உயிர்நாடி போன்றது என்பது தோற்றம். கடவுளை ஒதுக்கிவிட்டு நல்லொழுக்கம் மட்டும் போதிக்க வேண்டும் என்று இந்நாளில் பலர் எண்ணுகின்றனர். இது பயனற்ற செயலெனப் பல மேனுட்டறிஞரும் பகர்ந்துள்ளனர். பிற சமய நிந்தனை சிறிதுமின்றி அவ்வவ் ஆஸ்திக சமயத்தின் அடிப் படைக் கொள்கைகளை அவ்வச் சமயக் குழந்தைகட்குப் பரு வத்திற் கேற்ப முதலிற் போதித்தல் அவசியம். பின்பு பிறசம யங்கள் வற்புறுத்தும் ஒழுக்க உண்மைகளேயும் சமரச முறையில்

கற்பித்தலும் அவசியம். கடவுளை மறந்த கல்வி எந்த விழுப் பயனையும் விளைக்காது.

தக்க ஆசிரியரை அடுத்துக் கல்வி கற்கும் போது அறி வாற்றல்கள் பெருகுகின்றன. 'கல்வியின் பயன் அறிவு' என் பர் திருவள்ளுவ தேவர். 'அறிவு என்பது இதுதான், இதுதான்' என்று சில குறட்பாக்களில் சுட்டிக் காட்டி யிருப்பதை எல்லாம் நன்ருகத் திரட்டிப் பார்த்தால், 'அறிவு' எனும் சக்தியின் அக லமும், ஆழமும், நுண்மையும் இனிது விளங்கும். சிலவற்றை மட்டும் ஈண்டுக் காண்பாம். (i) "எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப் பொருள் காண்பது அறிவு" (ii) "எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப் பொருள் காண்பது அறிவு" (iii) "சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ நன்றின்பால் உய்ப்ப தறிவு" (iv) "எவ்வ துறைவது உலகம், உலகத்தோடு அவ்வதுறைவது அறிவு" (v) எண்பொருளவாகச் செலச் சொல்லித் தாம் பிறர்வாய் நுண் பொருள் காண்பது அறிவு" (vi) பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்பது அறிவு."

"அறிவுடையார் தாம்" எல்லாம் உடையார். பண்டைக் காலத்தில் அறிவு என்பது நல்லொழுக்கத்தையும் தெய்வ நினை வையும் தன்பாற்கொண்டிருந்தது. ஒரு மாபெரும் கிரேக்கப் பேராசிரியரும் "Knowledge is Virtue" என்ருர். பிற் காலத்தில் வெறும் நூலறிவு மெய்யறிவு எனப் பொய்யாக மதிக்கப்பட்டது. "கற்றபின் நிற்க அதற்குத் தக" என்ற ஆணையை மீறி நடப்போன் அறிஞனுகான். "அறிவினன் ஆகுவதுண்டோ பிறிதின் நோய் தன்நோய்போற் போற்ருக் கடை?" என்ற ஆணித்தரமான வினவும் மன்னுயிரிரக்கமும் ஈகை ஒப்புரவுச் செயலும் இல்லாதவன் என்ன பட்டம் பெற்றிருப் பினும் அறிவுடையவனென அறிஞரால் மதிக்கப்படான் என்ற உண்மையை விளக்குகின்றது.

நூலறிவு அவசியமே. "இளமையிற் கல்" "நூற்பல கல்" என்ற ஔவைப்பிராட்டியின் ஆணையின்படி, பலகலை களையும் கசடறக் கற்க வேண்டுவதே. ஆனுல் இது மெய்யறி வாகாது. "நூலறிவுபேசி நுழைவிலார் திரிக', என்ருர் காரைக்

காலம்மையார்: "ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா; சுடர் விட்டுளன் எங்கள் சோதி" என்று பரமாசாரியர் திருஞான சம்பந்தர் அறிவுறுத்தி யுள்ளார். "வாசித்துக் காணொணாதது" என்றார் அருணகிரியார். அறிவுக்கு—நூலறிவுக்கு—அப்பால் மெய்யறிவு என்றொன்று உள்ளது. அது உணர்வினால் கிடைப்பது—புத்தக அறிவாராய்ச்சிகளால் அன்று. இயமநியமப் பழக்க வளர்ச்சியால்—ஞான சாதனங்களால்—திருவருள் துணையைப் பெற்று, "அவனருளே கண்ணாக"க் காணுநிலை கைகூடிய பின்புதான், வாய்க்கக் கூடியது. இதனாலன்றே, அதே ஆத்திசூடியின் பிற்பகுதியில் "வித்தை விரும்பு", "வீடு பெற நில்" என்று ஞானப் பாட்டியார் பணித்துள்ளார். "நூற்பல கல"என்று முதலில் குறித்தது அபர வித்தையை—புத்தக அறிவை; இப்போது குறித்தது பர வித்தையை—பரம்பொருள் காட்சி அநுபூதியை. இது தான் பூரண நிலைக் கல்வியின் குறிக்கோள்.

இக்குறிக்கோளை அடைதற்கு முதற்கண் வேண்டுவது நல்லொழுக்கமும்—இயம நியமப் பழக்கமும்—தெய்வவழிபாடும் ஆம். தமிழ் மறை, மக்கள் வையத்து வாழ்வாங்கு வாழ்வது எப்படி என்பதை மிகத் தெளிவாகக் கூறுகின்றது. கடவுள் வாழ்த்து, அறன் வலியுறுத்தல், அன் புடைமை, ஒழுக்க முடைமை, ஒப்புரவறிதல், ஈகை, அருளுடைமை, தவம், வாய்மை, கொல்லாமை, மெய்யுணர்தல், குடிமை, மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை, நன்றியில் செல்வம் போன்ற அதிகாரங்களில் கூறியிருக்கும் பண்புகளனைத்தையும் வாழ்க்கையில் வளர்த்து, "சான்றோன்" எனத் தன்னை அறிஞர் போற்ற வாழ்வதே மாணவர் வாழ்க்கையின் சீரிய குறிக்கோளாகும்.

இதற்கு இல்லறமும் ஏற்றதே. "இகபர சௌபாக்யம் அருள்வாயே" என்று முருகனை அருணகிரியார் வேண்டியதில் இழுக்கேதுமில்லை. "எங்கும் சிவம், எல்லாம் அதனுடைமை, எல்லாம் அதனடிமை" என்று பாவித்து விட்டால் புறத்துறவு வேண்டியதே இல்லை. பாரதியார் பாடிய "யோகசித்தி" "நல்லதோர் வீணை" "சிவசக்தி புகழ்" போன்ற பகுதிகளை உணர்வுடன் பாடி மகிழ்தல் நல்லுணர்வை வலுப்படுத்தும்.

இருதேவிமாரோடும் அயில்வேல் முருகன் மயில் மீதிருக்கும் காட்சி சான்ருேனுகிய மனிதன் எப்படியிருப்பான் என்பதைக் குறிப்பதாகும். மயில், விசித்திரமான உலகைக் குறிக்கும். வள்ளியம்மை இச்சாசத்தி; தெய்வயானை கிரியாசத்தி. வேல் ஞானசத்தி. இரு சக்திகளும் இறைவன் திருமுக மண்டலத்தை நோக்கியிருக்கின்றனர். முருகன் தன் கை வேலை மட்டும் தன் திருமேனியில் சார்த்திப் பிடித்திருக்கிருன். மனத்தில் ஓரிச்சை எழுந்தால், அதன் வழிச் செல்லலாமா என்று ஞானத்தைக் கேட்க வேண்டும். அது அநுமதித்தால் மட்டும் கிரியாசக்தி தொழிற்பட்டு அந்த விருப்பத்தை நிறைவேற்றலாம் என்பதும், மயக்கும் பிரபஞ்சத்திற்கு அடிமையாகாமல் அதற்கு நாயகனுயிருந்து கொண்டு அதைச் செலுத்த வேண்டும் என்பதும் படிப்பினை.

இப்படி ஒவ்வொரு மாணவனும் தன் இச்சைகளை ஞானத்திடம் - அறிவினிடம் - தெரிவித்து அது அளிக்கும் தீர்ப்பின்படி நடப்பதே மேன்மை. "சென்ற இடத்தாற் செலவிடாது" எனத் தொடங்கும் திருக்குறள் சுட்டுவதும் இதனையே. "கண்டதே கண்டதே காமுறும் பேதையேன்" என்று ஓரடியார் தம்மை நொந்து கொண்டார். இவ்வாறு நோதற்கு இடந்தராமல் தன்னைத்தான் அடக்கியாள வல்லவனை உலகம் பெரியோன் என்று போற்றும். "I am in the world, but not of the world" என்ருர் ஏசுபெருமான். இத்தகைய மாணுக்கர், மாண்பினைப் பெரிதும் ஆக்குபவராவார்.

நாம் ஒவ்வொருவரும் இவ்வுலகில் பிறந்த நாள் தொட்டு இறக்கும் நாள் வரையிலும்—அதன் பின்பு சிறிது காலமும் - பிறரிடமிருந்து பல வகை உதவிகளைப் பெறுகிருேம். அவர்களிற் பெரும்பாலோர் நமக்கு நேராகத் தெரிந்தவர்களுமல்லர். இயற்கை அன்னை செய்யும் எண்ணற்ற உதவிகளின் அற்புதத்தைத் தான் என்னென்று கூறுவது! இயற்கையைத் திருமேனியாகக் கொண்டு, இறைவன் தான் மறைந்து நின்று பல வழிகளில் நமக்கு உதவி வருகின்ருன். "மருவி எப்பொருளும் வளர்ப்போன் காண்க" என்ற மணிவாசகம் இங்கே கருதத்தக்கது. இப்படி என்றும் தோன்ருத் துணையாயிருந்து உதவி

வரும் பரம்பொருள் பால் பெருநன்றி நமக்கிருத்தல் வேண்டும். அது எல்லா வுயிர்கட்கும் உயிராய்த் தங்கி யிருக்கின்றது. ஆதலால் இராமலிங்க அடிகள் அருளியபடி, "எத்துணையும் பேதமுறுது எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணி உள்ளே ஒத்துரிமை உடையவராய் உவக்கின்"றவர்களாக நாம் வாழ வேண்டும். "தரித்திர நாராயண சேவை"யின் இயல்பை உணர்ந்து இயன்ற பணி ஏதேனும் நாடோறும் செய்து வர வேண்டும்.

படித்துப் பட்டம் பெற்று, பெரிய I. A. S. பதவிகளில் அமர்ந்து பொன்னும், பொருளும், போகமும், அதிகாரமும் பெறுதலே வாழ்க்கையின் குறிக்கோள் என்று, இக்கால மாணவர்களிற் பலர் எண்ணிப் படித்து வருகின்றனர். 'Your worth will not be measured by your ability to make faultless English speeches. Your worth will be measured by the service you render to the poor, and not by the government posts worth Rs. 60 or Rs. 600 that you have got'' என்று காந்தியடிகள் நாகபுரி மாணவர் கூட்டம் ஒன்றில் கூறினர்.

ஒவ்வொருவனது இறுதிக் காலத்திலும் அவன் வாழ்க்கை வாணிபத்தைத் தருமதேவதை முடிவாக மதிப்பிடும் போது அவனை நோக்கி, "நீ பிறரிடமிருந்து எடுத்த தெவ்வளவு? நீ பிறர்க்கு அன்புடன் கொடுத்ததெவ்வளவு?!"என்ற கேள்விகளைக் கேட்கும். தருமதேவதை மகிழக்கூடிய பதிலை உண்மையாகத் தரும் தகுதியை இளமையிலிருந்தே வளர்த்துக் கொண்டு வருதல் நன்மாணுக்கர் இலக்கணங்களுள் ஒன்று. "கிழமைப் பட வாழ்" "கீழ்மையகற்று" "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்" "இன்பச் செவ்வி மன்பதை எய்த அருளறம் பூண்ட ஒரு பெரும் பூட்கையன்" என்பன போன்ற ஆன்றோர் திருவாக்குக்கள் நமது மனமொழி மெய்களை மேல் நெறியிற் செலுத்த உதவும். இதற்குப் பெரியாரைத் துணைக்கோடல், அன்பர் கூட்டத்திருந்து ஆண்டவனை அகமுருகித் தொழுதல் என்பன போன்ற நல்லுபாயங்களைக் கைக்கொள்ள வேண்டும்.

மாணவர்கள் இச்சீரிய குறிக்கோளை உணர்ந்து கொண்டு, இயன்ற அளவில் நாடொறும் மன்னுயிர்த் தொண்டு ஏதேனும் செய்து வரவேண்டும். ஒரு உதாரணமும் தருகிறேன்: ஜனநாயக ஆட்சி நமக்குக் கிடைத்துள்ளது. "Universal suffrage without universal education would be a curse" என்று H. L. வேலெண்டு என்ற ஒருவர் முன்னமே எழுதியுள்ளார். எழுத்தறிவின்மையைப் போக்க நமது அரசாங்கம் பெரு முயற்சிகள் பல செய்து வருகிறது. ஆயினும் கல்வி கற்ற பொதுமக்களின் ஒத்துழைப்பு போதியவளவு இன்னும் கிடைக்கவில்லை. மாணவர் மன்றம் செய்ய விரும்பும் நவமணிகள் போன்ற ஒன்பது வகைத் தொண்டுகளில் முதியோர் கல்வி வளர்ச்சியும் ஒன்ருக உள்ளது. இத்துறையில் குன்ரு ஊக்கத்துடன் பல அடுக்குகளில் பணி செய்து நல்லறிவு பெருக்கல் உலகிற்கு நிலைத்த பெருமையையும் புண்ணியத்தையும் நல்கும்.

அளப்பரும் தொன்மையும் நன்மையும் படைத்த நம் தாய்மொழியின் சிறப்பை, நம் பாரதநாட்டுப் பிற மாகாணங்களிலுள்ளவர்களில் பலர் அறியாதவர்களாயிருக்கின்றனர். தமிழ் மக்கள் இத்துறையிற் சிறப்பு வகையில் தொண்டாற்றி பிற மொழிகளில் நமது சிறந்த நூல்களைப் பயன் தரும் முறையில் மொழி பெயர்த்து வழங்க வழி கோலுவதும் மிக முக்கியமானதோர் தொண்டாகும்.

மற்றுமொன்று மாணவர் குறிக்கோளினேர் பகுதியாய் இடம் பெறற்குரியது: தற்கால விஞ்ஞான வளர்ச்சியால் எல்லா நாட்டு மக்களும் மிக நெருங்கிய தொடர் புடையவர்களாகி வாழ்கின்றனர். இறைவன் தலைமையில் உலகமெல்லாம் ஒரு பெருங் குடும்பமாய் ஒத்து வாழவேண்டும் என்பது அவன் திருவுளக் குறிப்பு என்பது புலப்படுகிறது. அதனெடு "ஒத்துச் சென்று," அவன் "திருவருள் கூடிடும் உபாயம்"தறிந்து, அதன் வழியே நம் வாழ்க்கையை நடத்த வேண்டும். தவறினுல், இம்மையிலேயே "அருநரகிடை 'வீழ்வதற்கு ஒருப்படுபவர்களாவோம்." "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற உணர்ச்சியைச் சமயங்கள் வளர்க்க வேண்டும். ஆனல், இவை தம்

முள் பிணக்குகின்றன. 'என் மதந்தான் மெய்; மற்ற எல்லாம் பொய்; அவைகளை எல்லாம் ஒழித்துக் கட்டி என் மதத்தையே உலகெங்கும் பரப்ப எதுவும் செய்வேன்' என்பது மிகவும் வருந்தத் தக்கதும், அன்பைக் குலைக்கும் அறிவு குறைந்த செயலாகும்.

பிறசமயங்களைப் பழித்தல் கூடாது என்னும் உண்மை அசோகர் கல்வெட்டிலும், அவருக்கும் முந்திய நம் நாட்டு நூல்களிலும் வற்புறுத்தப்பட்டுள்ளது. எல்லாப் பெருஞ் சமயங் களும் தந்த சிறந்த அநுபூதிமான்கள் கருத்தும் இதுவே. எல் லாச் சமயங்களும் தத்தம் புனித நிலையில் வாழ வேண்டும் என்றும் அவர்களின் தனிநற்பண்புகளை—வற்புறுத்தி விளக் கும் உண்மைகளை—பிறரும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் எல்லா மதத்து அநுபூதிச் சான்றோரும் கூறுவர். "வேறுபடும் சமயமெலாம் புகுந்து பார்க்கில் விளங்கு பரம் பொருளே நின் விளையாட்டல்லால், மாறுபடுங் கருத்தில்லை" என்றருளிச் செய்தார் தாயுமானூர்.

சமயங்கள் எல்லாம் வளரும் சிறு செடிக்கு வேலிகள் போல் உதவுவன. "சமயங் கடந்த மோன சமரசப்" பெருநிலை ஒன்றுள்ளது. அதை அடையச் சாதனம் பழக வேண்டும். சமயப் பூசலும் மத வெறியும் விசால அறிவின்மையைப் புலப் படுத்தும். நூருண்டுகட்கு முன்னமே ஜோஸெப் கோரெஸ் என்னும் ஒரு மேல் நாட்டறிஞர் இதுபற்றி எழுதியிருக்கும் மிக அருமையான கருத்தை, டாக்டர் பிரடெரிக் ஹெய்லர் என்னும் ஜெர்மானியப் பேராசிரியர் ஒருவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

"One Godhead alone is at work in the universe, one religion alone prevails in it, one worship, one fundamental natural order, one law and one Bible in all. All prophets are one prophet: they have spoken on one common ground in one language, though in different dialects. As the great civilizations of every kind are the same, the unfolding of one life, so are also the great mythical elements of the whole world the same and the whole religious genesis is a single growth,

planted by the very spirit of God, and nourished by Him."

எவ்வளவு விசாலமான நோக்கம்! என்ன மாட்சியுடைய காட்சி! இது பாரத தேசத்தில் தொன்று தொட்டு இருந்து வருவதே. இச்சமரச நன்னிலை தான் இக்காலத்தில் உலக சகோதரத்துவத்தை வளர்க்கும். பல சமயங்களிற் பிறந்த மாணவர்களும் இப்பெரு நோக்கின் மாண்பை அறிந்து அதனைக் கைக்கொள்ள வேண்டும். எம்மதத்திலுமுள்ள உண்மையை மதித்துப் போற்ற வேண்டும். இப்போது நிகழ்வது போன்ற மதமாற்றம் அறிஞர் பார்வையிலும் ஆண்டவன் பார்வையிலும் நல்லதாய்த் தோன்றுமா? உலக மாணவர் அனைவரும், ஒரு பெரும் குடும்பத்தவர் என்னும் அன்புணர்வுடன் சமயத் துறையிலும் பழகுவதைத் தம் குறிக்கோளாகக் கொள்ளவேண்டும்.

மாணவர் விழுமிய குறிக்கோளைக் கொள்வாராயின், மன் பதை, "புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை விலக்கி" விடும். "மேலாம் நன்நெறி"யில் ஒழுகும். "குறைவிலாது உயிர்கள் வாழும்."

நம் தமிழ்த் தொண்டு உலகெங்கும் பரவுவதை நாம் நாட வேண்டும். தமிழ் மன்றங்கள் யாவும் இப் பெரும் பணியை நன்காற்றிச் சிறப்புறும் வரத்தைத் திருவருள் நல்குமாக.

(1) "வந்தித்து நின்னை மறவாக் கடனுகச்
சிந்தைசெய நின்ன தருள் செய்யாய் பராபரமே!"

(2) "எவ்வுயிறும் என்னுயிர்போல்
எண்ணி யிரங்கவும் நின்
தெய்வ அருட்கருணை
செய்யாய் பராபரமே!" (தாயுமானுர்.)

---


A. No. 10631
M47

# யாண்டும் இடும்பை இல!

'பாலகவி' வயிநாகரம்,
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
(தத்புருஷ தேசிகர்) தேவகோட்டை.

---

உடம்பு கொண்டு பிறந்திருக்கின்ற எல்லா உயிர்களாலும் விரும்பப் பெறுவது இன்பம்; வெறுக்கப் பெறுவது துன்பம். இந்நிலவுலகத்தில் வாழுகின்ற அனைவரும், இன்ப துன்பங்கள் கலந்த வாழ்க்கையை உடையவர்கள். எனவே, துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் இவர்களால் பெரிதும் வேண்டப்பெறுகின்றன. அதற்கான பலவகை முயற்சிகளும், இடையீடின்றி இங்கே நிகழ்ந்து வருவதை நாமறிவோம். எத்தனையோ வகைகளில், என்னென்னவோ முயற்சிகளை மேற்கொண்டாலும், வருகின்ற துன்பங்களை மாற்றிக் கொள்ளும் வகையறியாமல் வாடுகின்றவர்களைத் தான், இந்நாளில் மிகுதியாகக் காண நேரிடுகின்றது.

"கஞ்சி வரதப்பா" என்று ஒரு வைணவ அடியார் சொல்லியதைக் கேட்டுப் பல நாட்களாகப் பட்டினி கிடந்த ஒருவன் "எங்கே வரதப்பா" என்று கேட்டானும், "யாண்டும் இடும்பை இல" என்று இப்போது இங்கே ஒருவர் சொல்லுவாரானால், மனிதன் உலகத்திலே வாழ்வதற்கு இன்றியமையாது வேண்டப் பெறுவதாகிய உணவுக்கும், அதையடுத்த மற்ற பொருள்களுக்கும் ஏங்கி யிளைக்கின்ற இந்த வேளையில், "எங்கே இடும்பை இல்லை" என்று எல்லோரும் முன்னவரைச் சூழ்ந்து கொள்வார்கள்.

இங்ஙனம் "யாண்டும் இடும்பை இல" என்று சொன்னவர், வேறு யாருமல்லர். உலகப் பேரறிஞர் அனைவராலும் மிக உயர்ந்தவரென்று பாராட்டப் பெறுகின்ற தெய்வப் புலமைத் திருவள்ளுவ தேவ நாயனாரே, தமது திருக்குறளில் "வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க், கியாண்டும் இடும்பையில"

என்று அருளிச் செய்கின்றார். உயிர்களுக்கு வருகின்ற இன்ப துன்பங்களுக்கு, மூலமாகிய காரணம் என்னவென்பது, முதற் கண் சிந்தித்துக் கொள்ள வேண்டிய ஒன்று.

துன்பத்தை நீக்கிக் கொள்ளுவதற்கும், இன்பத்தை ஆக்கிக் கொள்ளுவற்கும் முயலுகின்றவரனைவரும், அவை வருவதற் குரிய மூலகாரணத்தை ஆராய்ந்தறிந்து, ஏற்ற உபாயங்களைக் கடைப் பிடிக்காமையினாலேயே, முயற்சியில் வெற்றி கிடைக்கா மல் முட்டுப் பட்டுத் தவிக்கின்றனர். ஒரு செடி, நீரின்றி வாடு வதை, அதன் புறத்தோற்ற வுறுப்பாகிய இலைகளும், தளிர் களும் வெளிப்படுத்திக் காட்டுகின்றன. அது கொண்டு, அதன் வாட்டத்தைத் தவிர்க்க, அந்த இலை தளிர்களின் மேல், குடங் குடமாகத் தண்ணீரை ஊற்ற முற்படுவது அறியாமையின்பாற் படுமல்லவா? செடியின் நிலவடக்க வுறுப்பாகிய வேரில் சாரும் படி, அது நிற்கும் நிலத்தில் விடுகின்ற சிறிதளவு நீர், அதன் வாட்டத்தைத் தவிர்த்து, அச்செடியைப் பொலிவுடையதாக ஆக்குவது கண்கூடு.

உயிர்களின் இன்ப துன்பங்கள், புறத்தே வெளிப்படையாக அநுபவிக்கப் பெறுபவை. இவ்வநுபவமாகிய காரியத்திற்கு, அகத்தே மறைமுகமாக அவ்வுயிர்கள் முன்புசெய்த நல்வினை தீவினைகள் முதற்காரணமாகவும், தனு – கரணங்களாதியவை துணைக்காரணமாகவும், வினைகளை நுகரவைக்கும் கடவுள் நிமித்த காரணமாகவும் இருக்கின்ற பேருண்மையைத் தத்துவ நூல்களைக் கற்றுத் தெளிந்து கொள்ளுதல் வேண்டும். இங்ஙனம் தெளியும் மதுகையில்லாதாரின் எண்ணிக்கையே, இப்போது நாட்டில் மிகுந்து விட்டபடியால், வந்த துன்பத்திலிருந்து விடுதலை பெறவும், வரும் துன்பத்திலிருந்து விலகிக் கொள்ளவும் வழியில்லாது எல்லோரும் வாடிக் கொண்டிருக்கின்றனர்.

செடியின் வாட்டத்தைத் தவிர்க்க, அதன் இலைகளின் மேல் தண்ணீர் விடுவது மட்டுமல்ல; உரம் போடுவதும் கூடச் செடிகளில் மேலேயே தான் என்று இப்போதைய துன்பநீக்க முயற்சியாளர்களின் செயல்களை எண்ணும்போது, சொல்லு வதற்கு உள்ளம் துணிகிறது. நோயைப் போக்குவதற்கு மருந்து கொடுக்கும் வைத்தியன் அந்த நோயை நாடி யறிந்து

கொள்ளுவது மட்டும் போதாது; அது வந்ததற்குரிய மூல காரணத்தையும் நாடியறிந்து கொள்ளுதல் வேண்டுமென்பது, "மருந்து" என்னும் அதிகாரத்தில், வள்ளுவப் பெருந்தகையார் வைத்தியனுக்கு உணர்த்தும் உபாயமாகும்.

நோயை அறிந்து செய்யும் மருத்துவத்தைவிட, நோய் மூலத்தை அறிந்து செய்யும் மருத்துவமே, நூற்றுக்கு நூறு பயன் தருவதாயிருக்கும். அதுபோல் இன்ப துன்பங்களுக்கு மூலம் எதுவென்பதை நாடியறிந்து, கடைப்பிடிப்பதே நூற்றுக்கு நூறு பயன் தருமென்பது, ஊகித்துணரத் தக்கதாகும். ஆண்டி முதல் அரச போகம் உடையவர் வரை – குழந்தைகள் முதல் முதியவர் வரை – கல்வியறிவு கடுகளவுமில்லாத கீழ் மக்கள் முதல் ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் வரை எல்லோரும், துன்ப அநுபவம் உடையவர்களாகவே இங்கு வாழ்ந்து வருகின்றார்கள். இப்படி எங்ஙனும் எல்லோரையும் பற்றி நின்று துன்பம் வருத்துகின்றபொழுது, திருவள்ளுவர் "யாண்டும் இடும்பை யில" என்று துணிந்து கூறுவதற்கு என்ன காரணம்?

உலகத்தை ஏமாற்று முகத்தால் தம்மையே ஏமாற்றிக் கொண்டு, தந்நலக் குறிக்கோளுடன், சந்தர்ப்ப வாதிகளாக உலவுகின்ற இக்காலப் புலவரிற் பெரும்பாலோர் போன்றவரா திருவள்ளுவர்? தகுதி சான்ற பழங்காலப் புலவர் அனைவரிலும், தலைமை சான்று விளங்கியவரல்லவா அவர்? எனவே, அவரது திருவாக்கிற் காணப் பெறும் உண்மையையும் உபாயத்தையும் நாம் உளங் கொண்டு கடைப்பிடிப்பது நமது துன்பநீக்கத்திற்கு உதவி புரிவதாயிருக்கும்.

நம்மால் அநுபவிக்கப் பெறுகிற அத்தனை துன்பங்களும், நாம் முன்னே செய்து வைத்த தீவினை காரணத்தால் வருவனவேயாம். வினை அறிவில்லாத தாகையால், அது தன்னைச் செய்தவனிடம் தானே சென்று பயனை அளிக்காது. அதனால், வினை செய்தவனை அறிந்து அதற்குரிய பயனை அநுபவிக்குமாறு, பேரறிவு படைத்த ஆண்டவன் செய்து வருகின்றான். கொலைக் குற்றத்தை ஒருவன் செய்தானானால், அதற்குரிய தூக்குத் தண்டனை அல்லது ஆயுள்தண்டனை முதலியவற்றை, அக்

கொலேயே முன்னின்று கொடுப்பதில்லே. குற்றத்தை விசாரித்துணர்ந்த நீதிபதி, அக்குற்றத்துக்குரிய தண்டனேயை அநுபவிக்குமாறு செய்கிருர். நீதிபதி நம்போன்ற சிற்றறிவுடையவராதலால், அவருக்கு உண்மையுணரப் பல சாதனங்கள் வேண்டப் பெறுகின்றன. இறைவன் பேரறிவன் ஆதலாலும், எல்லா இடங்களிலும் எப்பொழுதும் நிறைந்திருப்பவனுதலாலும், உயிர்களது வினேயை அறிந்து பயனே ஊட்டுவது, அவனுக்கு மிக மிக எளிமையானதாகின்றது.

வினே, வினேயைச் செய்பவன், வினேப்பயன், அப்பயனே ஊட்டுபவன், என்னும் நான்கு உண்மைகளேயும் சித்தாந்த சைவ நெறி யொன்றிலன்றி வேறெந்த நெறியிலும் காண முடியாது. இதனுலேயே

"செய்வினேயும் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள்" எனக்கொண்டே
"இவ்வியல்பு சைவநெறி யல்ல வற்றுக் கில்லே"

எனச் சேக்கிழார் பெருமான் அருளிச் செய்தார்.

வினே, அநுபவத்தாற் கழிவது என்றும், அருளினுற் கழிவது என்றும் இருவகைப்படுவது. பிராரத்தம் முன்வகையைச் சேர்ந்தது. சஞ்சித – ஆகாமியங்கள் பின் வகையில் அடங்குபவை. பிராரத்தம் அநுபவிக்கப்படுவதேயாயினும், இறைவன் திருவருள் அதன் அநுபவத்தில் உடன் கூடுமாயின், அது உறைத்துத் தாக்காது; மேற்போக்காகத் தாக்கி நின்று கழியும். சிவஞானிகளது பிராரத்த வினேயால் உண்டாகின்ற துன்பாநுபவம், அங்ஙனம் மேற்போக்காகக் கூடத் தாக்காமல், இறைவன் திருவருளினுல் இன்ப அநுபவமாகவே மாறி விடுவதும் உண்டு. அப்பரடிகளுக்கு, "நீற்றறை குளிர்ந்தது" முதலிய வரலாறுகள், இங்கே நினேவு கூரத் தக்கன.

நம்முடைய துன்ப அநுபவத்துக்கு நாம் செய்த தீவினேயே மூலகாரணமென்றும், அது நம்மிடம் சேர்ப்பானின்றித் தானே வந்து சேராது என்றும், சேர்ப்பவன் சிவபெருமானே என்றும் தெரிந்து கொண்டோமானுல், அத்துன்பத்தை நீக்கிக் கொள்ளுவதற்கு அவனேச் சரணடைய வேண்டியதன்றி வேறு என்ன வழி இருக்கிறது?

சிவ பெருமானுக்கு ஒன்றில் விருப்பும், மற்றொன்றில் வெறுப்பும் கிடையாது. எனவே பட்சபாதமில்லாது, செய்திக்குத் தக்க செயலுறுத்தும் பேரறம், அவனுக்கு உரியதாயிருக்கின்றது. அவனுடைய திருவடியைச் சேர்ந்து நிற்பதே, தீவினை நீக்கத்துக்கும் அதன் பயனாகிய துன்ப ஒழிப்புக்கும் ஏற்ற உபாயமாகும். சிவபெருமானின் வேறல்லாத முருகப் பெருமானின் துதியாகிய, கீழ்க்கண்ட வெண்பாவில் இவ்வுண்மையைக் காணுங்கள்.

வந்தவினையும் வருகின்ற வல்வினையும்
கந்த னென்று சொல்லக் கலங்குமே — செந்தினகர்ச்
சேவகா என்று திருநீ றணிவார்க்கு
மேவவா ராதே வினை.

நலம் பெருகுக.

மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய

திருவாசகம்

புதிய பதிப்பு

(திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் பராபவ மார்கழித் திருவாதிரை வெளியீடு)

பதிப்பாசிரியர்;

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஜூனியர்,
வித்துவான், ஸ்ரீ முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
மாணிக்கவாசக சுவாமிகள் வரலாறு, நூற்சிறப்பு,
சில சிறப்புப் பாடல்கள் அடங்கியது.

தனிப்பிரதி அடக்க விலை 0-65 ந. பை.
தபால் கட்டணம் வேறு.

கிடைக்கும் இடம்:

T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L.,
நிரந்தரத்தலைவர், குமரகுருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம்.
(திருநெல்வேலி மாவட்டம்)

குறிப்பு: இதன் விற்பனைத்தொகை, திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால், ஸ்ரீவைகுண்டத்தில் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும்.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

## திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் கேதாரமந்திர் இரண்டாவது மாடியில்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஜூனியர் வித்துவான் ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுடன் ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம் பரம்பரை டிரஸ்டி திரு. டி. எம். குமரகுருபரன் பிள்ளை.



ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி, ஸ்ரீவைகுண்டம். 1966-67 கந்தர்கலிவெண்பா பாட்டுப் போட்டியில் வெற்றிபெற்ற மாணவிகள் பரிசுத்தொகை ரூ. 1500

# மெய்யடியாரின் வாழ்க்கை நெறி

சுவாமி பரமாத்மானந்தா அவர்கள்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மைலாப்பூர் — சென்னை 4.

## அன்புநெறியின் தனிச் சிறப்பு

"மனிதரது பந்தத்திற்கும் முத்திக்கும் மனமே காரணம்" என்பது சாஸ்திரம். அம்மனத்திற்கு அறிதல், அன்பு செய்தல், சங்கற்பித்தல் என்னும் மூன்று தொழில்கள் உண்டு என்பர் மன நூலார். இம்மூன்றில் யாதேனும் ஒன்றைப் பெருக்கி இறைவன் மீது குவியும்படிச் செய்வதால் மனிதன் முத்தி யடைவான்; ஆதலின் முத்திநெறிகள், அறிவுநெறி, அன்பு நெறி, சங்கற்பநெறி என மூன்றுவகைப் படுகின்றன; இவற்றை முறையே ஞானயோகம், பக்தியோகம், கருமயோகம் என்றும் கூறுவர். மனத்தின் தொழில்களில் ஒன்றைப் பயன்படுத்தி முத்தி யெய்துவதற்குப் பதிலாக, மனத்தை முழுக்கருவியாகக் கொண்டு, அதனை அலையெழவொட்டாது அடக்கி முத்தி யடைவதும் நெறியாகும் — இது இராஜயோகம் எனப்படும். இந் நான்குக்கு மேற்பட்டு நெறிகள் இருக்கவொண்ணாது என்பது வெளிப்படை. இவற்றுள் அன்பு நெறியே அனைத்துள்ளும் தனிச்சிறப்புடையதாகும். எவ்வாறெனில், அது பழகுதற்கு எளியது; இயல்பாகவே உள்ளத்து எழுகின்ற உணர்ச்சியை ஆதாரமாகக் கொண்டது; இராஜயோக நெறிபோன்ற ஏனைய நெறிகளுக்குரிய ஆபத்துக்களும், வெல்லற்கரிய தூண்டுதல் களும் அற்றது; அன்றியும் அது சிந்தித்தற்கும் கேட்டற்கும், உரைத்தற்கும் இனியது. உலக மக்களிற் பெரும்பான்மை யோர்க்கு உதவுவது எனினும், உயர்வற உயர்ந்த அனுபூதி நிலைக்கு ஒருவரை உய்க்கும் உறுதியுடையது. இக்காரணத் தால் உலக மக்களின் பற்பல மதங்களைச் சார்ந்தாரும் விரும்பிப் பின்பற்றுவது இந்நெறியே யாகும்.

## சரண்புகுதலின் மாண்பு

மெய்யன்பர்கட்குப் பெரிதும் இனிக்கும் நெறியாவது இறைவனிடம் பெருநம்பிக்கையுற்று, அவனே கதியெனும் உறுதி பூண்டு, அவனிடம் தமது உடல், பொருள், ஆவி மூன்றையும் ஒப்படைத்து தமக்கென ஒன்றின்றி, தம்மால் இயன்ற சிறு பணியை இறைவற்கு அன்போடு இயற்றுதலே யாம். 'எல்லாம் உன்னுடைய செயலே' என்று இறைவன்பாற் சரண் புகுந்தார் தாயுமானுர். "என்று நீ அன்று நான்" என்றனர்; ஆதலின் சிவான்மாவும் பரமான்மாவைப் போன்று நித்தியமானது; இரு ஆன்மாக்களுக்கும் இடையே அனுதியான உறவு உண்டு. அவ்வுறவை மனிதனுலோ இறைவனுலோ, தனியாகவோ சேர்ந்தோ, ஒழிக்க இயலாது. அத்தகைய உறவு முறைகளுள், ஆண்டான் - அடிமை, தோழமை, தந்தை – மகன், நாயகன் – நாயகி என்ற உறவுகள் அடியார்களால் பெரும்பாலும் பழகப்படுவன. பேரடியார்கள் இந்த நெறிகளை வாழ்க்கையில் இடையருது பின்பற்றி, இறைவனது அருளைப்பெற்று உய்வடைந்துள்ளனர். எந்த உறவு பற்றி அவனையே சார்ந்து வாழ்வோராயினும், தாமாக முன் வந்து முதலில் அவனுக்கு மகிழ்வையூட்டும் ஒரு பணியினை இயற்றி வருவார்; நாளடைவில் தாமாகச் செய்வது ஒன்று இல்லை யென்பதையும், அதையியற்றும் திறமையும் அவனது இன்னருளால் விளைந்த ஒன்றே என்பதையும் உணரத்தலைப்படுவர். தம்மை ஒரு கருவியாகவும், இறைவனைக் கருத்தாவாகவும் கருதும் மனப்பான்மை முற்றி வரும். "தங்கடன் அடியேனையும் தாங்குதல்"—தேவரீருடைய கடமை, ஒன்றுக்கும் உதவாத அடியேனையும் தாங்கியருளுதல்; தாங்காதபோது கீழே விழுந்து விடுவேன்; 'என்கடன் பணி செய்து கிடத்தலே, – எனது கடமையாவது, தேவரீர்க்குப் பணி செய்து விட்டு, 'நீர் பணி செய்யுமாறு ஆட்டி வைத்தீர், நானும் அவ்வாறே ஆடினேன்' என்று உயிரற்ற பொருள் போலக் கிடப்பதேயாம். "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்று அப்பர் சுவாமிகளே திருவாய் மலர்ந்தருளினரன்றோ? இறைவன் தம்மை ஆட்டிவைப்பதைக் காணும் அறிவுடையவரே அடியார்; கருவிபோல ஆடினும், தம்மை வேறொருவர் ஆட்டி வைப்பதைக் காண்பது அறிவுடைய பொருளாகிய தமக்கு

இயல்பாகின்றது; இதுவே கருவிக்கும் சீவான்மாவுக்கும் உள்ள வேறுபாடு. சீவான்மா உணர்வுற்ற கருவியாகும். சீவான்மாவின் இயல்பு யாது? அறிவிக்க அறிவதே, இறைவன் காட்டக் காண்பதே. சீவான்மாவின் இருப்பும், அசைவும், வாழ்வும் பரமான்மாவிடத்திலே என்பர் மெய்யுணர்ந்தோர். இதனைத் தெள்ளத் தெளிய உணர்ந்து வாழ்ந்து, பேரின்பத்தில் அழுந்துதலே முத்தியாம். மணிவாசகப் பெருமான் இறைவனிடம் சரண் புகுந்து வாழ்ந்தார்; இறைவனிடம் ஒன்றை வேண்டலையும் விரும்பார். ஏன்? "வேண்டத்தக்கது அறிவோய் நீ, வேண்ட முழுதும் தருவோய் நீ, வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ, வேண்டியென்னைப் பணி கொண்டாய், வேண்டி நீ யாது அருள் செய்தாய்; அதுவே யானும் வேண்டினல்லால், வேண்டும் பரிசொன்றுண்டென்னில் அதுவும் உன் தன் விருப்பன்றே" (என்னிடம் வேண்டுகின்ற தன்மையொன்று உண்டானால், அதுவும் உன் விருப்பினால் என்பால் எழுந்தது என்பார் அவர்). அன்றியும், "அன்றே என்னை நீ ஆட்கொண்டபோதே, என் உடல் உயிர் உடைமை எல்லாவற்றையும் கொண்டனையன்றோ? இனி எனக்கு இடையூறு ஏது? நீ நன்றே செய்யினும் பிழைசெய்யினும், எனக்கென்ன சம்பந்தம்?" என்றும் கூறினர். இதுவே சரணாகதி நிலை. அடியான் இதனைப் பெற வேண்டின், இடையறுது மூன்று வகையாக முயல வேண்டும்: (1) இறைவனன்றி நான் வேறெவர்க்கும் வேறு எதற்கும் அடிமையல்லேன் என்றும், (2) எனது பிறவிப் பிணி நீங்குதற்கு இறைவனையன்றி வேறு எவரையும் (என்னையும்) வேறு எதையும் (எனது சரணம் புகும் முயற்சியையும்) உபாயமாகக் கருதேன் என்றும், (3) இறைவனையன்றி வேறெவரையும் வேறெதையும் நிலையான மெய்யான இன்பத்திற்கு மூலம் என எண்ணேன் என்றும் எப்போதும் எவ்விடத்தும் எந்நிலையிலும் சிந்தித்து வருதல் இன்றியமையாதது. இடையறுத இச்சிந்தனையின் பயன் யாதெனில், ஆணவத்தால் தனக்குச் சுதந்தரம் உண்டென்ற பொய்ப் பாவனையும், தனது சொந்த முயற்சியால் பேரானந்தப் பெருவாழ்வைப் பெற்று அனுபவிக்கும் திறன் தனக்கு உண்டு என்ற பொய்ப்பாவனையும் ஒழித்தலேயாகும். அனைத்துயிரையும் காத்து வரும் இறைவனுக்குத் தான் முற்றும் பரதந்தரமா

யிருக்கும் தன்மையைப் பற்றிய உணர்வு வேரூன்றிக் குடி கொண்டிருந்தாலன்றி, இறைவனது பேரன்பிற்கு உரிமையுற்ற உலக மக்களாகிய குழந்தைகளின் நன்மையில் அவன் கண்ணு யிருப்பவன், அவன் எல்லாம் உணர்ந்தவனும் எல்லாம் வல்ல வனுமாவன் என்ற பெரு நம்பிக்கை உள்ளத்து ஊறியிருந்தா லன்றி, அப்பொய்ப்பாவனைகள் இரண்டும் நீங்கா. தன் முயற் சியின் பயனின்மையில் உறுதியிருப்பது போன்றே, தன்முயற்சி இறைவனது முயற்சிக்குத் தடையாகும் என்பதையும் நன்குணர வேண்டும். பிறந்த குழந்தையைத் தாயின் அணைக்கும் கரங் களினின்றும் அக்கணமே பிடுங்கி, நரமாமிசத்தை விற்று வயிறு பிழைக்கும் ஒரு வேடனிடம் அதை ஒப்பித்தல் போன் றதே, தன் முயற்சியினல் முத்தி பெற முனைதல் என்ற உணர்வு அடியானிடத்துக் கொழுந்து விட்டெரிய வேண்டும். சுருங்கச் சொல்லின், அடியானிடத்து 'யான்' 'எனது' என்ற இரண்டும் வேரறுதல் வேண்டும்.

## ஆணவமும் சிற்றின்ப அவாவும்

உண்மையுரைக்கின், இறைவனது அருளையடைய விரும்பு வார்க்குப் பகைகளாயிருப்பன, ஆணவமும், ஐம்புல இன்ப அவாவுமே. இவ்விரண்டின் ஆளுகைக்கு உட்படுபவன் தன் ஆன்மாவைத் தானே மாய்த்துக் கொள்ளுகிருன். ஆணவம் என்னும் பயங்கரமான ஆயிரந் தலைபெற்ற அரக்கன், இறை வனுக்கு உரிமையான சிவான்மாவைத் திருடி, அவனது கரை யற்ற கருணைக்கு அது ஆளாகி உய்யுமாற்றைத் தடுத்து, தானே விழுங்குவதை விளையாட்டாகக் கொண்டுள்ளான். சீவான்மா அவ்வரக்கனது ஆளுகைக்கு வசப்படும்போது, தனக்கும் இறைவனுக்கும் உள்ள அழியா உறவை மறந்து, தன்னைத்தானே உய்விக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்கிருன், அதனுல் நாசமடைகிருன். அகங்காரம் என்னும் தீ, தொட்டதை எரித்தழிக்கும் தன்மையதாதலின், அடியார் அதனைக் காணும் போது அச்சமெய்துவர். மெய்யடியார் 'வீடும் வேண்டா விறலின' ராவர்; எத்தகைய பிறவியை இறைவன் அளிப்பானுயி னும், அதிலும் தன்னலமற்ற இறைபணியையே அவாவுவர். உண்மையடியார்க்கு அகங்காரத்தைப் போன்றே நஞ்சாவது

ஐம்புல இன்பப் பொருளின் சம்பந்தமே. சாஸ்திரங்களால் விலக்கப்பட்ட சிற்றின்பமோ, அவற்ருல் அனுமதிக்கப்பட்டதோ, எதுவும் நஞ்சென ஒதுக்கித் தள்ளத் தக்கது. முன்னது நஞ்சனையதாயின், பின்னது நஞ்சுகலந்த உணவனையது; பின்னது உண்ணத்தக்கதுபோலத் தோன்றி, விழிப்பாயிராதாரை வஞ்சித்து மறைவாக இருந்து கொல்லுமாதலின், பின்னது முன்னதினும் கொடியதாம். ஐம்புலப் பொருள்களிலே இன்பத்தை நாடுபவர் எரியுந் தீயைப் பருகித் தாகத்தைத் தணிக்க முயல்பவர் போன்றும், வெயிலுக்கு அஞ்சிப் படம் விரித்தாடும் பாம்பின் படநிழலில் ஒதுங்க முயல்வார் போன்றும், தமக்குத் தாமே ஊறு விளைவித்துக் கொள்ளுவர். இறைவனைப்பற்றிய சிந்தனையையே உணவாகக்கொண்டு வாழும் மெய்யடியாரிற் சிலர், இன்னிசையைச் செவிமடுத்து வாழும் அசுணப் பறவை பறையொலி கேட்டதும் மாய்வது போல, சிற்றின்பத்தைக் காணலையும் பொறுக்க மாட்டாதவராவர். அனைத்திற்கும் மேலாக, ஆணவமும், சிற்றின்ப வேட்கையும் பெற்றவர், மெய்யடியார்க்கு அபராதம் விளைப்பர்; இதனினும் மிக்க நாசம் உண்டாக்குவது பிறிதொன்றில்லை.

## ஞான இச்சையுடையார் வாழுமாறு

ஆணவத்தால் உடலை ஆத்மாவாகக் கருதும் மயக்கமும், ஆன்மா சுதந்திரம் பெற்றது என்ற மயக்கமும் கிளர்ந்தெழுமாதலின், அது மெய்யடியாரை நிந்திக்கும் இயல்புடையதாதலின், தம்மையே தமக்கு வைரியாகக் கருதுவார். உண்மையான பக்தர் உலகச்சார்புடையாரது இணக்கத்தால் மனதில் அடங்கிக் கிடக்கும் ஆணவமும் சிற்றின்ப அவாவும் தடிப்புறுமாதலின், அத்தகையாரைக் காணுங்கால், நச்சரவைக் கண்டதும் விலகிச் செல்வது போன்று புறக்கணித்து, அவரைக் காணவும் பொறுக்காது வேறிடம் செல்வர். இவ்விரண்டையும் வென்ற மெய்யடியார்கள் தமது நல்லுரையாலும் அனுபவத்தாலும் பிறர்க்கு அவ்விரண்டையும் வேரற மாய்க்கும் ஊக்கத்தை ஊட்டுவராதலின், அவர்களைப் பாதுகாப்பாகக் கருதி நாடுவர். கோயிலில் எழுந்தருளியிருக்கும் தெய்விகத் திருவுருவங்களைச் சாரும் போது, அவ்வடிவங்களோடு இறைவன் அங்கே வாழ்வதாகக் கருதிப்

பேரன்போடு வழிபடவேண்டும். தமது ஞானக்கண்ணைத் திறக்கச் செய்து இறைவனையும் ஆன்மாவையும் பற்றிய உண்மை ஞானத்தை அருளிய குரவரைக் காணுங்கால், பசியுடையவன் சோற்றைக் கண்டதுபோல, அவரது நல்லிணக்கத்தைத் தாகமோடு நாட வேண்டும். அடியார்களின் இலக்கணம் வாய்ந்த நண்பரைக் காணின், தமக்கு நெருங்கிய உறவினராகவும், தமக்குப் பேரானந்தத்தை வளர்ப்பவராகவும் கருதிப் பெருமகிழ்ச்சி கூர வரவேற்க வேண்டும். ஆணவத்தையும், பொருளாசையும், காமத்தையும் அன்பர் முப்பேரரக்கர்களாக அறிந்து, அவர்களுக்கு ஆட்படாது தப்பித்துக் கொள்ள வேண்டும்; ஏனெனில் அவை முறையே நலங்கருதுவாரைக் கேடு விளைப்பவராகக் கருதித் துரத்தும், பகைவரை அன்போடு ஆதரிக்கச் செய்யும், புறக்கணிப்பாரை நாடும்படித் தூண்டும். இறைவனுக்கும் நல்லடியார்களுக்கும் தாழ்மையொடு பணிசெய்யும் கருத்தை நசுக்கித் தற்பெருமையை வளர்க்கும் ஆதலின், மெய்யடியாரது காட்சி அவர்களை மெய்யன்போடு வழிபடும் உணர்ச்சியை எழுப்பாது, அவர்களினும் பெரியாரென்றோ அவர்களுக்குச் சமமானவரென்றோ பாவிக்கும் பொய்யான உணர்ச்சியைத் தூண்டி, அவர்கள் மீது உபேக்ஷையைப் பிறப்பிக்கும். பொருளாசை தனக்கு ஆட்பட்டவரை ஞான முயற்சிகளுக்குப் பகைவரான உலகச்சார்பினரை விட்டு விலகியோட விடாது, பொருளால் மயங்கி அவர்களது நட்பை விரும்பச் செய்யும், அவர்களது உறைவிடத்திற்குப் பன்முறை செல்லத் தூண்டும், அவர்களது குணத்தைப் புகழச்செய்யும், இவ்வாறு மெய்யான பகைவரது ஆதரவைப் பேணுபவராக்கும். காமவசப் பட்டார் சிற்றின்பங்களிற் பைத்தியங் கொண்டவராய் ஐம்புல இன்பங்கட்கு உறைவிடமான மாதர் தம்மைப் பொருட்படுத்தாத போதும், அவர்களை நாடி ஒடி இகழ்ச்சிக்கும் ஏச்சுக்கும் இலக்காக்கும்.

ஞான இச்சையுடைய அன்பர், தன்னடக்கமும் வைராக்கியமும் போன்ற ஆன்ம குணங்களைச் சுய முயற்சியாற் பெறுதலிலுள்ள அருமையை உறுதியாக உணர்வர், பல பிறப்பிடை போகந்துய்த்ததன் பயனாக எழுந்த தீய வாசனைகள் தம் உள்ளத்துக் குடி கொண்டிருப்பதைத் தெளிவாகக் காண்பராத

லால்; ஆணவத்திற்கும் பொருளாசைக்கும் காமத்திற்கும் ஆட்பட்டிருக்கும் பிறரது முயற்சியும் தமக்குப் பயனற்ற தென்பதை நன்கறிவர். குருவருளாலே உதிக்கும் இறைவனது திருவருளின் பெருக்காலே மட்டும் ஆன்ம குணங்கள் எய்தற்குரியனவாதலின், உடலைப்பற்றி யெழும் விருப்பங்களை அன்பர் புறக்கணிப்பர். ஞானப் பேற்றை எய்துவதிலே பேரவாவைவளர்ப்பர்; இம்மை மறுமைப் பொருள்களிலே இன்பத்தை நாட இடங்கொடாது மனத்தை எதிர்ப்பக்கமாக இழுப்பர். இறைவனுக்குச் சமர்ப்பிக்கும் பொருள்களையே பிரசாதமாக உட்கொண்டு உடலைப் போற்றி வந்து, அதனையும் நாடொறும் செய்யும் வழிபாட்டின் இறுதி அங்கமாகப் பாராட்டுவர். தமது உடலிலோ மனதிலோ சூழ் நிலையிலோ துயரங்கள் நேருமாயின் அவை பழவினையின் பயனாக வருதலின், அவற்றைப் பொறுமையோடு ஏற்றுக் கழித்தல் கடமை யென்று நினைப்பர்; அன்றேல், உலக வாழ்விலே கசப்பை ஊட்டி, நித்திய வாழ்விலே பேரவாவை மூட்டும் பொருட்டு இறைவனது அருள் அவ்வாறு செய்தது என்றிருப்பர்.

இறைவன்பால் முழுச் சரணாகதி நெறியையே பற்றி வருதலின், அன்பர் இறைவனொருவனையே உபாயமாகப்பற்ற வேண்டும்; சாஸ்திரங்களிற் கூறிய விதிகளை மீறுது தாம் ஒழுகுதலும் முத்திக்கு உபாயமாகும் என்னும் கருத்தை நீக்கல் வேண்டும். புகழொடு விளங்கிய பண்டைய மஹான்களான ஆசாரியர்களது முதிர்ந்த ஞானத்தையும் மாசற்ற ஒழுக்கத்தையும் பெறுவதில் ஈடுபடவேண்டும்; இறைவன் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திவ்விய தலங்களின் பெயர்களைக் கேட்கும் போதே, அன்பால் நெஞ்சம் இளக வேண்டும்; ஆங்கே பல்லாண்டு பல்லாண்டாக இறைவன் வாழ்ந்து, மன்னுயிரின் மீது இரங்கி, அருளைச் சுரக்குமாறு நெஞ்சாரப் பிரார்த்தித்தல் வேண்டும். இறையுணர்வு ஒழிந்த எதிலும் வெறுப்பு மீதுர வேண்டும்;வையத்தேஉடலொடு வாழ்தலிலேகூரும் பொறுத்தற்கரிய துயரத்தால் துடிக்கவேண்டும்; நித்திய உலகத்தே இறைவன் திருமுன்பே நித்திய அடியாரோடு கூடிவாழும் பேற்றைத் துய்க்கப் பேரவாக்கொள்ள வேண்டும். இறுதியாக, தூய

தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க,

# ஓடக்காரன்

திரு. T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்கள், B. A., L. T.
உதவி ஆணையர்,
இந்து அறநிலைய பாதுகாப்பு இலாகா
60. C - நெல்லுக்காரத் தெரு, காஞ்சிபுரம்.

இறைவனின் திருவடிகளை சதா எண்ணுபவர்கள் பிறவியாகிய பெரிய கடலைக்கடப்பர். எண்ணுதவர்கள் பிறவிக் கடலைக் கடக்கமாட்டார்கள். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர், நீந்தார் இறைவன் அடி சேராதார்." பிறவிக்கடலை நீந்துவதற்கு ஒரு ஓடக்காரன் தேவை. அவன் கருணையுள்ள ஓடக்காரனுக இருக்க வேண்டும். "யாது நிலையற்றலையும், ஏழு பிறவிக்கடலின் ஏற விடும் நற்கருணை ஓடக்காரன்" என வேளைக்காரன் வகுப்பில் அருணகிரிநாதர் அருளிச் செய்திருக்கிருர். யாதும் நிலையற்றது. நிலையான பொருள் பரம்பொருளே. அதைத்தான் ஆன்மாக்கள் பற்றுக் கோடாக பற்றிக் கொள்ள வேண்டும். இன்றேல் துன்பங்கள் பல. "பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு" என்பது பொய்யாமொழி.

ஏழு பிறவிக் கடலில் தத்தளிக்கும் ஆன்மா 'உனக்கே அடைக்கலம்' என்று இறைவனுகிய ஓடக்காரனைக் கூவுகிறது. அதுவும், 'கருணை மிக்க ஓடக்காரா' என்றழைக்கிறது. 'கற் பாந்த காலங்கடவாக்கடல் கடக்கத்தெப்பமாய் வந்தெனக்குச்

---

முன்பக்கத் தொடர்ச்சி

உணவை உண்டு, சான்ருேரது இணக்கத்தை நாடி, தீயாரோடு இருத்தலைத் தவிர்த்தல் வேண்டும்.

இதுவே பத்திநெறியிற் செல்வார்க்கு முத்திபெறுதற் பொருட்டுக் கடைப்பிடித்தற்குரிய ஒழுக்கமாகும் - இதுவே முந்தையோர் கண்டநெறி.

சேர்ந்ததே' என்கிருர் ஒரு மகான். ஓடக்காரன் வெற்ருளாய் நிற்க மாட்டானல்லவா? ஓடத்தை அணைந்தவனுயிருப்பான். இறைவனுகிய ஓடக்காரனுக்குத் தெப்பமாய் இருப்பது அவன் " திருவடி ". எல்லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம். எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள். எல்லா உயிர்க்கும் ஈறும் இணையடிகள். யாம் உய்ய ஆட்கொண்டருளும் "பொன் மலர்கள்" என்பது மணிவாசகர் வாக்கு. அவன் புகழ் நாடறிந் தது. நம்பினோர்க்கருள் செய்பவன். அவன் பாடற் சுவை நுகரும் ஓடக்காரன். பாடற்கிசைந்து பொற்ருளம் ஈந்தபெருமா னல்லவா? அவன் கடைக்கண் பார்த்தருள வேண்டுமென்பது தான் ஆன்மாவிடுக்கும் விண்ணப்பம். தம் பிறவிக்கடலை கடத்து பவன் இறைவனுகிய செந்திற்குமாரன் என்னும் ஓடக்காரன். ஆகவே ஆன்மா வந்து அடைக்கலம் புகுதல் அவனிடமே. அவன்தான் ஆன்மாவின் வருத்தத்தைத் தவிர்க்க வேண்டும். துன்பம் என்னும் அலைகள் மலைபோல வருகிறது. விரைவில் ஆன்மாவுக்கு கை கொடுத்தருள வேண்டுமென்று ஓடக்கார னிடம் விண்ணப்பிக்கிறது. ஆசைச் சுழலில் அகப்பட்டு அழிந் திட மோசம் வராமல், ஓடக்காரன் முன்னின்று கைகொடுக்க என்று இறைஞ்சுகிறது ஆன்மா. காமப் பெருமுதலை கடுகி வருகிறது. தீமைகள் கோபங்கொண்ட சுராமீன்போல், ஆன் மாவைத் தின்னத் துரத்துகிறது. மோகம் எனும் புயல் முழக்கி பயமுறுத்துகிறது. ஆக, வேகமாக எனைத் தோணியில் ஏற்ற விடையளிப்பாய் 'ஓடக்காரா' என இறைஞ்சுகிறது ஆன்மா. உன் கருணை ஓடத்திலே நிற்க இடம் அளிக்க வேண்டுகிறேன். என் துயரம் கண்டிரங்கு. நான் எப்பொழுதும் உனை மறவேன், என வழுத்துகிறது ஆன்மா. பிறவிக்கடலில் தத்தளிக்கும் ஆன்மா ஆனந்தம் அடைய, இத்திருமந்திரத்தைக் கைஆள வேண்டும்:

ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்தமாமே.

இவ்விண்ணப்பத்தை மனதில் கொண்டு, கவியரசு நடேச கவுண்டர், ஒரு கீர்த்தனை அமைத்துள்ளார். அதில் பரமேசு

வரனை ஒரு ஓடக்காரன் என்று வேடிக்கையாக, பொருள் பொதிந்த சொல்லில் அழைக்கிறார்.

அக்கீர்த்தனை பின்வருமாறு.

ஓடக்காரன்

வேலைக்காரன் வகுப்பில் "யாது நிலையற்றலையும் ஏழு பிறவிக்கடலின் ஏறவிடும் நற்கருணை ஓடக்காரனும்" என்று அருணகிரிநாதர் அருளிச் செய்த வாக்கினை ஒட்டியது இப் பாடல்.

ராகமாலிகை ஆதிதாளம்

பல்லவி

ஓடக்காரா... கருணை.... ஓடக்காரா நான்
உனக்கே அடைக்கலம்காண் ஓடக்காரா (ஓடக்)

அனுபல்லவி

1 நாடற்கரிய புகழ் ஓடக்காரா — சரணம்
நம்பின பேருக்கருள் ஓடக்காரா
பாடற்சுவை நுகரும் ஓடக்காரா — கடைக்கண்
பார்த்தருள வேணுமையா ஓடக்காரா. (ஓடக்)

2 செந்திற்குமாரன் எனும் ஓடக்காரா — பெரும்
சென்னக்கடல் கடத்தும் ஓடக்காரா
வந்துன் அடைக்கலம் நான் ஓடக்காரா — என்றன்
வருத்தம் தவிர்க்க வேண்டும் ஓடக்காரா (ஓடக்)

3 அல்லல் எனும் அலைகள் ஓடக்காரா — மலைபோல்
அடுக்கி வருகுதையா ஓடக்காரா
ஒல்லை உன் கை கொடுத்தே ஓடக்காரா — எனக்கு
உதவி நீ செய்ய வேண்டும் ஓடக்காரா (ஓடக்)

4 ஆசைச்சுழியினிலே ஓடக்காரா — நான்
அகப்பட்டழிந்திடவோ ஓடக்காரா
மோசம் வராமல் இனி ஓடக்காரா — நீ
முன்னின்று கைகொடய்யா ஓடக்காரா (ஓடக்)

5 காமப் பெருமுதலை ஓடக்காரா — விழுங்கக்
கடுகிவருகுதையா ஓடக்காரா
தீமைச் சினச்சுறவம் ஓடக்காரா — என்னைத்
தின்னத்துரத்துதையா ஓடக்காரா. (ஓடக்)

6 மோகம் எனும் புயல்தான் ஓடக்காரா — மிக
முழக்கி எறியுதையா ஓடக்காரா
வேகமுடன் எனை நீ ஓடக்காரா — தோணி
மேவ விடையளிப்பாய் ஓடக்காரா (ஓடக்)

7 நின் கருணை ஓடத்திலே ஓடக்காரா — இனி
நிற்க இடமளிப்பாய் ஓடக்காரா
என்துயரம் கண்டிரங்காய் ஓடக்காரா — உனை
எப்பொழுதும் நான் மறவேன் ஓடக்காரா (ஓடக்)

ஆளுடையார் திருமும்மணிக்கோவை - 11 ம் திருமுறை

பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனுந் தோற்றோணி கண்டீர் — நிறையுலகிற்
பொன்மாலை மார்பன் புனற்காழி சம்பந்தன்
தன்மாலை ஞானத்தமிழ். நம்பியாண்டார்நம்பிகள்.

---


உ

# திருவருட்பயன்

( மூலம் குறிப்புரையுடன் )

ஆங்கிலம் இந்தி மொழிபெயர்ப்புக்களுடன்

விலை ரூபா ஒன்று

கிடைக்கும் இடங்கள்:-

1. குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
(திருநெல்வேலி ஜில்லா)

2. தியாகராஜ விலாஸ்,
53, பிள்ளையார்கோவில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை.

# தகப்பன்சாமி சிவபிராற்குச் செய்த உபதேசம்

தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள்
சென்னை.

"தகப்பன்சாமி"* எனும் பெயரை முருகவேளுக்குச் சூட்டினவர் அருணகிரியார். தந்தைக்கும் குருவாய் இருந்து உபதேசித்த காரணத்தால் அப்பெயரை அவருக்குத் தந்தனர்.

"உழல் மதில் சுட்ட தழல்நகைப் பெருமான்
வணங்கிநின் றேத்தக் குருமொழி வைத்தோய்"

என்றார் கல்லாட ஆசிரியர்.

"மைந்த! எமக்கருள் மறையின் என்னுத், தன் திருச்
செவியை நல்கச் சண்முகன் குடிலை என்னும், ஒன்றெரு
பதத்தின் உண்மை உரைத்தனன்" —கந்தபுரா - 1 - 17 - 39

அவ்வுபதேசந்தான் என்ன என்று அறிய விரும்பினர் அருணகிரியார். தமக்கும் அவ்வுபதேசத்தை அருளுக என்று திருப்புகழிற் பல இடங்களில் அருணகிரியார் முருகவேளை வேண்டினதைக் காண்கின்றோம். உதாரணமாக,

"உமை பங்காளர்க் கன்றுபகர் பொருள் அருள்வாயே"** (397)

"வேணியர்க் கருள்கூரும் ... சத்திய வாசகம்
புற்புதப் பிராணனுக் கருள்வாயே" (1251)

"புரத்ரயம் எரித்த பெருமானும்—பத்தியொடு பரவ
அருளிய, மவுன மந்திரந்தனை விளங்கும்படி இனிது,
உணர்த்தி அருள்வாயே". (1127)

இங்ஙனம் இரங்கிப் பன்முறை கேட்டும் அந்த ரகசியப்பொருள் கிடைக்காமையால் அருணகிரியார் வேறு வகையான தந்திரங்களைச் செய்து பார்த்தார்; அதாவது "முருகா! உன் தந்தைக்கு நீ உபதேசித்த ரகசியத்தை அடியேனுக்கு உபதேசம் செய்ய

---

*"தவத்தின்சாமி, மயில்மிசை நடிக்குஞ்சாமி" சரவண
தகப்பன் சாமி யெனவரு—பெருமாளே. —திருப்புகழ் 1178.

** திருப்புகழ் எங்கள் எந்தையார் வ. த. சு. பிள்ளை அவர்களின் பதிப்பின்படி.

மனமில்லையானுல், 'வேண்டாமை' (நிராசை) ஒன்றை அடைந்து, உள்ளம் ஒடுங்கும் அன்புப் பேற்றினையாவது தந்தருளுக, என ஒரு வரம் கேட்பது போல வேண்டிப் பார்த்தார். இதை

"மாண்டார் எலும்பணி யுஞ்சடை
ஆண்டார் இறைஞ்ச மொழிந்ததை அருளாயேல்
வேண்டாமை யொன்றைய டைந்துள(ம்)
மீண்டாறி நின்சர ணங்களில்
வீழ்ந்தாவல் கொண்டுரு கன்பினை யுடையேனய்-

வேந்தாக டம்புபு னைந்தருள்
சேந்தாச ரண்சர ணென்பது
வீண்போம தொன்றல என்பதை யுணராதோ.

என வருவதிற் காண்க.

இத் தந்திரத்துக்கும் இறைவன் அகப்பட வில்லை போலும்; பின்னர், " நீ கங்கை சூடிக்குச் செய்த உபதேசத்தை எனக்கு உரை செய்தால் உன் குருத்துவம் சற்றேனும் குறையுமோ" எனச் சற்று வைதும் பார்த்தார். இதனை

"கங்கை வைத்த நம்பர்...பெறப் பகர்ந்த உபதேசம் சிறியேன்
தனக்கும் உரைசெயிற் சற்றும் குருத்துவம் குறையுமோ தான்?',

எனவருந் திருப்புகழிற் (723) காண்க.

இங்ஙனம் பலவிதம் அந்த ரகசியத்தை அறிய முயன்ற அருணகிரியார் ஈற்றில் வென்றனர்; அந்த ரகசியத்தை அருண கிரியாரின் வேண்டுகோட் கிரங்கி முருகபிரான் அவர்க்கும் உபதேசித்துள்ளார் என்பதையும், அது இன்னது என்பதையும் குறிப்பாகக் கந்த ரநுபூதியிலும், சற்று வெளிப்படையாகக் கந்தரலங்காரத்திலும், தெளிவாகத் திருப்புகழிலும் அருணகிரி யாரே குறிப்பிக்கின்றனர். கந்தர் அநுபூதியில்,

"நாதா குமரா நமஎன் நரனுர்
ஓதாய் என ஓதிய தெப் பொருள்தான்".

எனக் கேட்ட வினுவுக்கு, விடை பின் இரண்டடிகளிலேயே வெகு குறிப்பாக உள்ளது. எங்ஙனம் எனில், வேதாமுதல் விண்ணவர் சூடும் மலர்ப்பாதனும் நீ இருந்தும் "நீ குறமின்

பதசேகரன்'' – என்றுரே அதுதான்; எப்படி என்றுல், "யான் எனது'' என்னும் இரண்டும் எங்கே அற்றுள்ளனவோ அங்கே இறைவனைக் காணலாம்;

அங்கே இறைவன் தானே சென்று நின்று தோன்றுவன். வள்ளியம்மை முருகபிரானையே நாடிநின்ற காரணத்தால் முருகர் வள்ளியின் தினைப்புனத்துக்குத் தானே சென்றுர்; குறமின் (வல்லி) பாதசேகரர் ஆனுர்; எனவே தன்னை யிழந்தால் தலைவனைக் காணலாம் – என்பதே ரகசியப் பொருள். இந்நிலையை அநுட்டானத்திற் கொண்டு வந்து நடத்தினவள் வள்ளி யம்மையே; அவள் நிலையை உணர்ந்த முருகர்தாமே அவளை நாடிச் சென்று கல்யாணம் முயன்றுர் என்பதைக்–

"கின்னங் குறித்து அடியேன் செவி நீயன்று கேட்கச் சொன்ன
குன்னம் குறிச்சி வெளியாக்கி விட்டது .... சிறுமிதனை
முன்னம் குறிச்சியிற் சென்று கல்யாண முயன்றவனே'' (24)

என்னும் கந்தரலங்காரத்திற் காண்க.

இதன் பொருள் "முருகா! என் மனக் கிலேசத்தை அறிந்து (நான் வேண்டின) ஒரு ரகசியத்தை நீ உபதேசித்தாய். அந்த ரகசியம் இன்ன தென்பதை குறிஞ்சிநில ஊராகிய வள்ளிமலை எனக்கு வெளியாக்கி விட்டது, எப்படி என்றுல், அவ் வேட்டுவச் சிறுமியை நாடி நீயே அவளிருந்த ஊருக்குச் சென்று அவளைக் கலியாணம் செய்துகொள்ள முயன்றுயாதலின்''; இச்செய்யுளில் "சென்று'' என்பது எத்துணைப் பொருளாழத்துடன் கூடியது! இறைவன் தானே சென்றுர் என்பது தான் அவரது அருட்டிறம்; இந்த அலங்காரச் செய்யுளால் வள்ளியம்மை கைப்பற்றின நன்னெறியே இறைவனை வசப்படுத்தக் கூடிய நெறி என்பதும், இந்த நெறியையே கைப்பற்றுக – எனவும் அருணகிரியார்க்கு முருகர் உபதேசித்தனர் என்பதும் தெரிகின்றன. இதுவே "தன்னை மறந்தாள், தன் நாமங் கெட்டாள், தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே'' என அப்பர் சுவாமிகள் குறிப்பிட்ட நிலை. இந்நெறியை அருணகிரியார் சுருக்கமாக "வள்ளிச் சன்மார்க்கம்'' எனக் குறிக்கின்றனர், இதற்கு "வள்ளி அருட்டித்த நன்னெறி'' என்பது பொருள்; எனவே முருகபிரான் உபதேசித்த ரகசியப் பொருள் என்ன என்றுல் யாரொருவர்

தன்னையிழந்து (யான் – எனது என்பன அற்று) தலைவனை நாடுகின்றனரோ அவரை இறைவன் தானே நாடிவந்து அருள் புரிவான் என்பதே. இவ்வுண்மையை அப்பர் பெருமான்

'தேடிச்சென்று திருந்தடி ஏத்துமின்
நாடிவந்(து) அவர் நம்மையும் ஆட்கொள்வர் (5-118-5)

எனவும், அருணகிரியார்

'சிலைக்கை மிண்டர்குன் றமைத்த பெண்தனந் தனையாரத்
திருக்கை கொண்டணைந் திடச்செல் கின்றநின்
திறத்தை யன்புடன் தெளியாதே மிண்டுரைக்கும் வம்பன்

(1074) எனவும் குறித்துள்ளார்கள்.

இந்த வள்ளிச் சன்மார்க்க ரகசியத்தைத்தான் முருகபிரான் சிவபிராற்கு உபதேசித்தனர் என்பது "கள்ளக்குவாற்பை" (317) என்னுந் திருப்புகழில்,

"வள்ளிச் சன்மார்க்கம் விள்ளைக்கு நோக்க
வல்லைக்குள் ஏற்றும் இளையோனே"

எனஅருமையாக விளக்கப்பட்டுளது. இதன் பொருள் விள்ஐக்கு-ரகசிய உபதேசம் எது என்று வினவிய தந்தைக்கு, வள்ளிச் சன்மார்க்கம் – வள்ளி அநுட்டித்த நல்வழியே தலைவனை (கடவுளை) வசப்படுத்தும் வழியென்று, நோக்கவல்லைக்குள் – ஒரு நொடிப் பொழுதில் (விரைவில், கண்ணிமைப் பொழுதில்), ஏற்றும் (அவர் காதில் ஏற்றிய) உபதேசித்தருளிய இளை யோனே! குழந்தைக் குருநாதனே" என்பது. இந்த ரகசிய தத்துவத்தைத்தான் தட்சிணாமூர்த்தியின் திருவுருவம் விளக்குகின்றது. எங்ஙனம் எனில் அவரது சின்முத்திரையில் பெருவிரல் பரமாத்மா; சுட்டு விரல் சீவாத்மா; சுட்டு விரல் வணங்கிப் பெருவிரலை நாடினால், பெருவிரல் சுட்டு விரலைச் சேரும். அதுபோல சீவாத்மா வணங்கினுல் பரமாத்மா தானே வந்து அருள் சுரக்கும். (வள்ளியைநாடி முருகர் வந்ததுபோல), ஒருமுறை ஒருதுரை தட்சிணாமூர்த்தியின் திருவுருவத்தைப் பார்த்து இந்த வுருவத்தில் பெருவிரலும் சுட்டு விரலும் ஒன்று கூடி இருப்பதின் கருத்து என்ன என்று கேட்க, ஓர் அறிஞர் பைபிளில் உள்ள "The Parable of prodigal son" என்பதின்

கருத்துத் தான் இதன் கருத்து; வணங்கித் தன்னிடம் வந்த பிள்ளையின் பிழையைப் பொறுத்துத் தந்தையார் அந்தப் பிள்ளையை ஏற்றது போலச் சுட்டு விரல் சீவாத்மா வணங்கினால் பெருவிரல் பரமாத்மா அதனோடு கூடும் என்பது தான் சின்முத்திரையின் விளக்கம் என்றார். இதை அறிந்து துரை மகனார் ஆச்சரியப்பட்டனர் என்ப.

இவ்வாறு தமக்கு ரகசியமென்று உரைத்த பொருளை வெளி இட்டதைக் கண்டே, தாயுமானவர்

''ஐயா! அருணகிரி அப்பா! உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார்! - வையகத்தோர்
சாற்றரிதென் நேசற்றார் தன்னையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்கும் கைகாட்டினான்'' எனவியந்து

அருணகிரியாரைப் பாராட்டியுள்ளார். ரகசியம் என்று தமக்கு இறைவன் உபதேசித்த பொருளை "நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் நன்னோக்கத்துடன் உலகுக்கு வெளி யிட்ட கருணை காரணம் பற்றியும், தம்முடன் வாதில் தோல்வி யுற்ற வில்லிபுத்தூரருக்குக் கர்ன தானம் செய்த கருணை காரணம் பற்றியுமே "கருணைக்கு அருணகிரி" என ஆன்றோரால் அருணகிரியார் பாராட்டப்பட்டனர். மேற்கூறியவற்றினின்றும்

''தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும் அன்ப போற்றி''

என்னும் மணிவாசகர் திருவாக்கும்,

''தொழுதகை யமைதியி னமர்ந்தோயு நீயே
அவரவ ரேவ லாளனு நீயே''

என்னும் பரிபாடலும் ஈண்டு உணர்ந்து மகிழற் பாலன.

"யான் கொட்கு மறுநீங்கிப் பத்தி செய்வோர்க்(கு)
ஏவல் செயும் பணியாளன் ஈசன் என்றும்
இன்பநிலை காட்டுதற்கே வள்ளி பாதம்
இறைஞ்சினைநீ! அதனுண்மை இன்றுணர்ந்தேன்
தேன்சொட்டுங் கடம்பணியுஞ் சேயே! உன்றன்
திருவிளையாட்டின் பெருமை செப்பற் பாற்றோ
சிந்திப்போர் நெஞ்சகத்தில் ஊறுந்தேனே
திருத்தணிகை மலைவாழும் தேவ தேவே.

உ

திருச்செந்திலாண்டவன் துணை



தமிழ் நாட்டில் உள்ள உயர்நிலைப்பள்ளிகளில் 1966 March மாதம் நடைபெற்ற S. S. L. C. சர்க்கார் பரிட்சையில் அதிகப்படியான பள்ளி மாணவர்கள் தேர்ச்சி பெற்றதற்காக, மாநில கல்வி இயக்குநர் சிறப்புச் சான்றிதழ் வழங்கியதையொட்டி, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி, துவக்கப்பள்ளி ஆசிரியர்கள், ஆசிரியைகளுக்கு, மானேஜ்மெண்டார் விருந்தளித்து உபசரித்த பாராட்டுவிழா-I



தமிழ்நாட்டில் உள்ள உயர்நிலைப்பள்ளிகளில் 1966 March மாதம் நடைபெற்ற S. S. L. C. சர்க்கார் பரீட்சையில் அதிகப்படியாக, நம்பள்ளி மாணவர்கள் தேர்ச்சி பெற்றதற்காக, மாநிலகல்வி இயக்குநர் சிறப்புச் சான்றிதழ் வழங்கியதைபொட்டி. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி, துவக்கப்பள்ளி ஆசிரியர்கள், ஆசிரியைகளுக்கு, மானேஜ்மெண்டார் விருந்தளித்து உபசரித்த பாராட்டு விழா–II



# இறை வழிபாடு

திருப்புகழமிர்தம் ஆசிரியர்
திருமுருக கிருபானந்தவாரி அவர்கள்

---

இறைவன்

எங்கும் நிறைந்தவன் இறைவன். இறை என்ற சொல் 'இறு' என்ற பகுதி அடியாகப் பிறந்தது. சரம் அசரம் என்ற எல்லாப் பொருள்களிலும் தங்கியிருப்பவன் இறைவன்.

"பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே"

"அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்தபூர்த்தியாகி அருளொடு நிறைந்தது"

இறை.

உடம்பிலே உயிரும் உயிரிலே இறையும் தங்கியிருக்கின்றன. உதை பந்து-பந்துக்குள் "பிளாடர்"; அதற்குள் காற்று என்பதுபோல் எல்லாப் பொருள்களையும் எல்லா உயிர்களையும் இயக்குகின்றதனால் அப் பரம் பொருள் இயவுள் எனப் பேர் பெற்றது. "பெரும்பெயர் இயவுள்" என்பார் நக்கீரர். எல்லாவற்றையும் கடவுவதனால் கடவுள் எனவும் பேர் பெற்றது.

ஒரு மருத்துவ மனையில் மருத்துவர் தங்கியிருப்பதன் நோக்கம் அம் மருத்துவ மனையில் உள்ள பிணியாளர்களின் பிணிகளைப் போக்குவதே யாகும். அதுபோல், இறைவன் எல்லா உயிர்களிலும் தங்கி அவ்வுயிர்களின் பிறவிப் பிணியைப் போக்குகின்றனன்.

"உள்ளொடு புறங்கீழ் மேலாய்
உயிர்தொறும் ஒளித்து நின்ற கள்வன்"

என்பார் பரஞ்சோதி முனிவர்.

"அண்டமும் அளவிலாத உயிர்களும் ஆகமாகக் கொண்டவன்"

என்பதும் அவருடைய திருவாக்கு.

இன்னணம் இறைவன் எங்கும் இருப்பினும் ஞானிகள் திருவுள்ளத்திலும் திருக்கோயில்களிலும் சிறப்பாக விளங்கித் தோன்றுகின்ருன். ஏனைய இடங்களில் இறைவன் மறைந்திருக்கின்ருன்.

"ஓராதார் உள்ளத்துள் ஒளிக்கும் ஒளியானே"

— *மாணிக்கவாசகர்.*

பாலில் நெய் மறைந்திருப்பது போல் பிற இடங்களில் இறைவன் நிறைந்து மறைந்திருக்கிருன். கடைந்த தயிரில் வெண்ணெய் திரண்டு உருண்டு வெளிப்பட்டிருப்பது போல் ஞானிகள் உள்ளத்திலும், திருக்கோயிலிலும் இறைவன் விளங்கிக் காட்சி யளிக்கின்ருன்.

மற்ற இடங்களில் இறைவனே நினைந்து தியானிப்பதனுலும் துதிப்பதனுலும் வழிபடுவதனுலும் வினைகள் வெதும்புகின்றன. கோயிலில் இறைவனே வழிபட்டால் வினைகள் வெந்து எரிந்து கரிந்து நீருகி விடுகின்றன.

கொடிய வெய்யிலில் ஒரு துணியை வைத்தால், அத்துணி, வெதும்புமேயன்றி வெந்து சாம்பராகாது. சூரியகாந்தக் கண்ணுடியை வெய்யிலில் வைத்து அதன்கீழ் வரும் மற்ருெரு வெய்யிலில் துணியை வைத்தவுடனே அத்துணி சாம்பராகி விடுகின்றது. நேர் வெய்யிலுக்கு இல்லாத ஆற்றல் சூரியகாந்தக் கண்ணுடியின் கீழே வருகின்ற வெய்யிலுக்கு உண்டு.

பரந்து விரிந்து இருக்கின்ற கதிரவனுடைய வெப்பத்தை ஒன்று படுத்தித் தன் கீழே சூரியகாந்தக் கண்ணுடி பாய்ச்சுகின்றது. பிற இடங்களில் இறைவனே வழிபடுவது வெய்யிலில் வேட்டியை வைப்பது போலாகும். திருக்கோயிலில் இறைவனே வழிபடுவது சூரியகாந்தக் கண்ணுடியின் கீழே வைப்பது போலாகும். ஆதலால், திருக்கோயில் வழிபாடு இன்றியமையாததாகும்.

"மாலறநேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரன்எனத் தொழுமே"

என்பது சிவஞானபோதம்.

திருக்கோயில்களில் உள்ள திருவுருவங்கள் தேவர்களாலும், முனிவர்களாலும், நால்வர், ஆழ்வார்கள் ஆகிய ஆன்ரேர்களாலும் நிறுவப்பெற்ற காரணத்தால் அவை மேன்மை பெற்று வழிபடுவோருடைய வல்வினைகளை யகற்றி, வேண்டிய வரங்களை வழங்கி அருள் புரிகின்றன.

பசுவின் உடல் முழுவதும் பால் பரவியிருப்பினும் மடியின் மூலமாக அதனைப் பெறுவது போல் எங்கும் நிறைந்திருக்கின்ற இறைவனுடைய திருவருளைத் திருக்கோயில்களில் உள்ள திருவுருவங்கள் மூலமாக நாம் பெறுதல் வேண்டும்.

ஒரு பறவை இரு சிறகுகளைக் கொண்டு பறப்பதுபோல், இறை வழிபாட்டிற்குப் பூவும் நீரும் வேண்டப்படுகின்றன.

"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்"

என்பது திருமந்திரம். எங்கும் நிறைந்த இறைவனை, எங்கும் எளிதாகக் கிடைக்கக்கூடிய பூவினாலும், நீரினாலும் நாம் வழிபட வேண்டும். வழிபாட்டிற்கு அன்பும், ஆசாரமும் இரண்டு கண்கள் போன்றவை.

"அன்புடன் ஆசார பூசை செய்து
உய்ந்திட வீணாள் படாது அருள் புரிவாயே"

என்று அருணகிரிநாத சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்ருர்.

திருக்கயிலாய மலையில் பார்வதி பரமேச்வரர் மீது விளையாட்டாக வில்வக் கிளையை உதிர்த்த குரங்கு அபுத்தி பூர்வமாகச் செய்த அச் சிவ புண்ணியத்தால் பூவுலகிற் பிறந்து, முசுகுந்தச் சக்ரவர்த்தி என்ற பெயருடன் மூவுலகும் ஆண்டது.

"வில்வக் கிளையுதிர்த்த வெய்ய முசுக்கலையைச்
செல்வத் துரை மகனுய்ச் செய்தனையே" —திருவருட்பா

இறைவழிபாடு செய்து மார்க்கண்டேயர் மறலியை வென்ற வரலாறு உலகம் அறிந்த ஒன்று.

ஆத்ம ஜோதியில் அருட்ஜோதி சூழ சிவஜோதி விளங்குகின்றது.

ஆத்மஜோதி – வட்டமாகிய கல்.
அருட்ஜோதி – சூழ்ந்திருக்கின்ற ஆவுடையார்.
சிவஜோதி – மேல் நோக்கிய இலிங்கம்.
இதுதான் சிவலிங்கத்தின் உண்மை.

"ஜோதியுள் ஜோதியுள் ஜோதி"

என்பார் இராமலிங்க அடிகளார்.

கோயில் ஐந்து பிராகாரங்களோடு கூடியது. இந்த உடம்பே இறைவன் இருக்கின்ற திருக்கோயில். இந்த உடம்பும் அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்ற பஞ்ச கோசங்களை யுடையது.

உடம்பில் 32 கட்டுக்களோடு கூடிய முதுகு தண்டே திருக்கோயிலில் கொடிமரமாகக் காட்சியளிக்கிறது. கொடி மரத்தில் கொடி ஏறியவுடன் இறைவன் வெளியே வந்து காட்சியளிக்கின்றான். அதுபோல், முதுகெலும்பாகிய வீணாதண்டத்தில் வளைந்து செல்லுகின்ற சுழுமுனை என்ற வெள்ளை நரம்பின் வழியாகப் பிராணவாயு ஆறுதாரங்களையுங் கடந்து, பிரமந்திரத்தைத் தாண்டி சகஸ்ரார வெளியிலே சென்றவுடன் சிவஜோதி காணப்படும்.

திருக்கோயிலில் விளங்கும் பத்திர இலிங்கமாகிய பலிபீடம் பாசத்தையும், நந்தி தேவர் பசுவையும், சிவலிங்கம் பதியையும் குறிப்பிடுகின்றன.

நமது சரீரத்தில் உள்ள மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களையுங் கோயிலில் உள்ள யாகமண்டபம், அலங்காரமண்டபம், கல்யாணமண்டபம் நிருத்தமண்டபம், மகாமண்டபம், அர்த்த மண்டபம் என்ற மண்டபங்கள் தெரிவிக்கின்றன,

எனவே திருக்கோயிலில் சென்று இறைவனை வழிபட்டு அங்கே கண்ட பரம்பொருளை நம் உடம்புக்குள்ளேயும் கண்டு மனோ லயம் பெற வேண்டும்.

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காள மணிவிளக்கே" — *திருமந்திரம்*

கட்டையில் கனல் மறைந்திருக்கின்றது. "விறகிற்றீ யினன்" என்கிறார் அப்பர் பெருமான். கட்டையைக் கடைந்த வுடன், அதில் மறைந்த கனல் வெளிப்பட்டுக் கட்டை கன லாகக் காட்சியளிப்பது போல், உயிரில் ஒளிந்திருக்கின்ற இறைவனை ஞானத்தால் கடைவோமாயின் சிவம் வெளிப்பட்டுச் சீவனைச் சிவமாக்கிக் கொள்ளுகிறது.

எண்ணில் காலமாக எண்ணில்லாத உடம்பு எடுத்து வரு கின்ற நாம் இறைவனை மெய்யன்புடன் உள்ளம் குழைந்து உருகி மலரிட்டு அருச்சனை செய்து வழிபட்டால் பிறவி நோய் தீரும்.

"கன்றெடுத்து விளவெறிந்து காலெடுத்த மழைக்குடைந்த காலிகாக்க
மன்றெடுத்த மால்விடையின் கொடியெடுத்து வடிவெடுத்துக் கூறொணாத
மன்றெத்த சேவடியின் மலரெடுத்துச் சாத்தியபின் வழிபட்டோர்கள்
இன்றெடுத்த வுடற்பிறவி யினியெடா வண்ணமெண்ணம் எய்துவாரே"
— *சிவரகசியம்*

## தெய்வம் ஒன்று

திருக்கோயில்களில் சிவலிங்கம், தக்ஷிணாமூர்த்தி, நடராஜர், சந்திரசேகரர், அம்பிகை, விநாயகர், முருகர், திருமால் என்ற பல மூர்த்திகள் இருப்பினும், அவைகள் அனைத்தும் ஒரே மூர்த்திதான்.

நெருப்பு—சிவபெருமான்
நெருப்பில் உள்ள சூடு—அம்பிகை
நெருப்பில் உள்ள செம்மை நிறம்—விநாயகர்
நெருப்பில் உள்ள ஒளி —முருகவேள்.

"சுடரோ சிவபெருமான் சூடுபரா சக்தி
திடமார் கணநாதன் செம்மை—படரொளியோ
கந்தவே ளாகும் கருதுங்கால் சற்றேனும்
வந்ததோ பேத வழக்கு"

மலர்—சிவபெருமான்
மலரின் வடிவம்—அம்பிகை
மலரின் நிறம்—கணபதி
மலரின் மணம்—மயிலவன்.

நூல்—சிவபெருமான்
நூலின் அகலம்—பார்வதி
நூலின் நீளம்—கணேசர்
நூலின் கனம்—குமாரக்கடவுள்.

சிவபெருமானுடைய சக்திகள் நான்கு. அருள் சக்தி, போர் சக்தி, கோப சக்தி, புருஷ சக்தி.

அருள் சக்தி—பார்வதி
போர் சக்தி—காளி
கோப சக்தி—துர்க்கை
புருஷ சக்தி—விஷ்ணு.

"அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே"

என்பது அப்பர் திருவாக்கு.

முக்கண்ணன்—முக்கண்ணி
சங்கரன்—சங்கரி
திரிபுர சுந்தரன்—திரிபுர சுந்தரி

என்பது போல், அரன்—அரி என வந்தது. ஆகவே, திருமாலின் வழிபாடும் அம்பிகையின் வழிபாடும் ஒன்றென உணர்க.

திருக்கோயில்களில் காட்சி யளிக்கும் துவாரபாலகர்களில் ஒருவர் ஆள்காட்டு விரலைக் காட்டி நிற்பது உள்ளே வழிபடச் செல்வோருக்குக் கடவுள் ஒன்றே என்பதை அறிவுறுத்துகிறது. மற்றொரு துவாரபாலகர் ஒரு கையை விரித்துக் காட்டுவது, கடவுள் ஒன்றைத் தவிர வேறொன்றில்லை என்பதை உணர்த்துகின்றது. இதையே "ஏகம் ஏவ அத்விதியம் ப்ரம்ம" என்று

வேதம் கூறுகின்றது. கடவுள் ஒன்றேதான்; இரண்டாவது இல்லை என்பது இதன் பொருள்.

எனவே, தெய்வவழிபாடு செய்வோர் தெய்வபேதம், மூர்த்தி பேதம் குறித்து மாறுபட்டு மலையாது, நிலையாய அன்புடன் ஒரு பொருளைத் தியானித்து வழிபடவேண்டும்.

"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனார் தாம் வருவர்" — *சிவஞான சித்தியார்.*

"ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்" — *அப்பர்.*

ஒரு காகிதத்திற்கு இரண்டு பக்கங்கள் இருப்பது போல், தெய்வத்திற்கும் இரண்டு பக்கங்கள் உண்டு. ஒன்று தட்பம், மற்றொன்று வெப்பம். வெப்பமும் தட்பமும் சமமாக இருந்தால் தான் மலர் மலராகக் காட்சியளிக்கும். வெப்பம் மிகுந்தால் மலர் வாடும். தட்பம் மிகுந்தால் மலர் அழுகும்.

இந்த உடம்பும் சீதோஷ்ணத்தால்தான் வாழ்கின்றது. ஒரு சமயம் இந்த உடம்பில் சூடு குறையுமானால் சுற்றத்தார் சூழ்ந்து கொள்வார்கள். மருத்துவர் வந்து பார்த்து "TOO LATE" என்று கூறி, அவர் விரும்பியதெல்லாம் கொடுங்கள் என்று சொல்லுவார். ஆகவே, உலகிற்கு வெப்பமும் தட்பமும் இன்றி யமையாதவை. வெப்பத்தின் நுண்மை சிவம். தட்பத்தின் நுண்மை திருமால். வெப்பத்தின் நிறம் சிவப்பு. தட்பத்தின் நிறம் பச்சை. எனவே, சிவமூர்த்தி பவளம் போல் மேனியன். திருமால் பச்சைமா மலைபோல் மேனியன். சிவம் அனல் ஏந்தி விளையாடுகின்றது. திருமால் ஆழியிடைத் துயிலுகின்றார். சிவாலயத்தில் வெந்த நீற்றையும், விஷ்ணு கோயிலில் தீர்த்தப் பிரசாதத்தையும் வழங்குகின்றார்கள்.

பாதி சிவம். பாதி விஷ்ணு. இந்த தத்துவத்தைச் சிவ மூர்த்தங்கள் இருபத்து ஐந்தனுள் கேசவார்த்த மூர்த்தம் என்பது தெரிவிக்கின்றது. சங்கர நாராயணர் கோவிலும் இதற்குச் சான்று.

"தாழ்சடையும் நீள்முடியும் ஒள்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்நாணும் தோன்றுமால்—வீழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்
கிரண்டுருவும் ஒன்ருய் இசைந்து"

என்று ஆழ்வார் கூறுகிருர்.

சிதம்பரம், திருநெல்வேலி, காஞ்சீபுரம், திருக்குற்ருலம், திருவருணை முதலிய திருத்தலங்களில் உள்ள சிவாலயங்களில் திருமாலும் காட்சி தருகின்ருர்.

ஏன் வணங்க வேண்டும்?

நம்மிடைப் பலருக்கும் இறைவனை ஏன் வணங்க வேண்டும்? வணங்காவிடில் என்ன? மனித வாழ்வில் இறை யுணர்ச்சி இல்லாமல் வாழ முடியாதா? நாம் வணங்காவிடில் கடவுளுக்கு என்ன நஷ்டம்? என்ற வினுக்கள் உள்ளுணர்வில் எழுவது இயல்பு. இவைகளுக்கு விடைகாண முயல்வது முறை.

விலங்குகளும் உண்ணுகின்றன; உலாவுகின்றன, வம்சத்தை வளர்க்கின்றன; மனிதர்களாகிய நாமும் உண்ணுகின்ருேம்; உறங்குகின்ருேம்; உலாவுகின்ருேம், மக்களைப் பெறுகின்ருேம். இவை விலங்குகட்கும் மனிதர்கட்கும் ஒன்ருகவே அமைந்திருக்கின்றன. விலங்குகளினின்றும் மனிதன் உயர்ந்து காட்சியளிப்பது தெய்வ உணர்ச்சி ஒன்ருலேயே தான்.

ஒரு கானகத்தில் விலங்கு மாநில மாநாடு கூடிற்று. அதில் தலைமை தாங்கிய சிங்கம் "விலங்குத் தோழர்களே! உயிர் வாழ்க்கைக்கு ஆடை அவசியமா? மனிதர்கள் ஆடைக்கு அவசியமின்றி அதிகம் செலவழிப்பது அறிவின்மையாகும். அது வருந்தத் தக்கது; கண்டிக்கத் தக்கது" என்று கூறிற்று. இதுபோல் மனித வாழ்க்கைக்கு கடவுள் வணக்கம் தேவையா? நாங்கள் கடவுளை வணங்காமல் வாழவில்லையா? என்று வினுவுவார்கள். மானம் உள்ளவன் ஆடை உடுப்பான். மனம் உள்ளவன் இறைவனை வணங்குவான்

மனிதன் செய்கின்ற பாவங்களுக் கெல்லாம் கழுவாய் உண்டு. நன்றி கொன்ற பாவத்துக்கு மட்டும் கழுவாய் இல்லை.

"எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" — திருக்குறள்

ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்
மாணிழை மகளிர் கருச் சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன
நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்
செய்தி கொன்ருேர்க்கு உய்தி இல்லென
அறம் பாடிற்றே" (புறநானூறு 34)

எனவே, கழுவாய் இல்லாத பாவம் நன்றி கோறல் ஆகும். இதற்கு நேர் மறுதலையாகச் சிறந்த புண்ணியம் நன்றி மறவாமை யாகும். இந்த உடம்பையும். உடம்பின் உறுப்புக்களையும் உள்ளுறை கருவி கரணங்களையும் தந்தவன் இறைவன். கண்ணைக் கொடுத்த இறைவன் கண் தூசு பட்டு மங்காமல் இருக்கும் பொருட்டு கண்ணிற்குக் கதவு போல் இமையும் கொடுத்தான், அந்த இமையின் நுனியில் உரோமங் களையும் அமைத்தான். உணவு உண்கின்ற வாயில் உண வைத் துகள் படுத்த (Flour Mill) பற்களையும் கொடுத்தான். வாய்க்குள் நுழைகின்ற பொருள் நல்லனவா? அல்லனவா? என்று சோதித்து உள்ளே அனுப்ப வாய்க்கு நேராக இரண்டு காவற்காரர்களைப் போல் இரு நாசிகளை அமைத்தார். உண்ணு கின்ற உணவைப் பல் மெல்லவும், நாவில் நீர் ஊறவும் அமைத் தார். நம்முடைய உடம்பில் எல்லா அவயவங்களிலும் நரம்புகள் உள. நாவில் மட்டும் நரம்புகள் இல. ஏனே?

நரம்புள்ள பகுதிகள் சுளுக்கிக் கொள்ளும். நாவில் நரம்பு வைத்திருந்தால் ஒரு நாளுக்கு நூறு முறையாவது சுளுக்கிக் கொள்ளும். விளக்கெண்ணெய் தடவி உருவ வேண்டிவரும். இறைவன் கருணையினுல் இடையருது பேசுகின்ற நாவை நரம் பின்றிப் படைத்துக்கொடுத்தான். அவன் கொடுத்த நாவினுல் அவனுடைய நாமங்களைச் சொல்லுதல் நன்றி பாராட்டுதலாகும். அவன் கொடுத்த தலையினுல் அப்பரம பிதாவை வணங்குதல் நன்றிக் கடனுகும். வடமொழியில் காலையும் மாலையும் கடவுளை வணங்குவதை சந்தியா வந்தனம் என்பார்கள். சம்=செவ்வை

யாக, தியா=தியானித்து, வந்தனம்=வணங்குவது சந்தியா வந்தனமாகும். இந்தச் சொல்லைப் பார்க்கினும் ஒருகோடி மடங்கு பொருளாழம் உள்ளதாக கடவுளை வணங்குவதற்குக் காலைக் கடன், மாலைக்கடன் என்று தமிழில் ஆன்றோர் கூறினர். கொடுத்த கடனை திருப்பிக் கொடாதது எத்துணைப் பெரிய பாப மாகுமோ, அத்துணைப் பெரிய பாபமாகும் இறைவனை வணங்கா திருத்தல். "என் கடன் பணி செய்து கிடப்பதே" என அப்பர் பெருமான் குறிப்பிடுகின்றார்.

கருணையே வடிவாகிய இறைவன் உயிர்களின் மீதுள்ள இரக்கத்தினால் இந்த உடம்பை வழங்கினான் என்பதை முன்னர் அறிந்தோம். அவன் தந்த உடம்பினால் அவனை வழிபடுவது கடமையாகும். இன்றேல் கடமையை மறந்த மடமையாகும். காவிரியில் ஒருவன் நீராடுவது காவிரிக்கு நன்மை விளையும் பொருட்டன்று. தன் உடம்பிலுள்ள வெப்பம் தணியும் பொருட் டுக் காவிரியில் நீராடுகின்றான். அதுபோல அருட் கடலா யிருக்கிற ஆண்டவனை வழிபட்டால் நம்முடைய பிறவி வெப்பம் தணிகின்றது.

"ஆர்த்த பிறவித்துயர்கெட நாம் ஆர்த்தாடும்
தீர்த்தன் நற்றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும் கூத்தன்"

என்று மாணிக்கவாசக சுவாமிகள் திருவெம்பாவையில் அருளிச் செய்கின்றார்.

ஆதலின் அப்பர் பெருமான், இறைவன் நமக்கு தலை முதலிய கருவிகளைத் தந்தான் என்று தெரிவித்து விட்டு அக்கருவிகளை நோக்கி இறைவழிபாடு செய்யுங்கள் என்றும் அருளிச் செய் கின்றார்.

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சம்
தாழ்த்த சென்னியும் தந்த தலைவனை
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே.

தலையே நீ வணங்காய்—தலைமாலை தலைக்கணிந்து
தலையாலே பலி தேரும் தலைவனை
தலையே நீ வணங்காய்.

உடம்பின் பயன் இறைவனை வணங்குவதாகும். அறிவின் பயன் இறைவனை அறிவதாகும். கல்வியின் பயன் கடவுளைத் தொழுவதாகும்.

"கற்றதனுலாய பயன் என்கொல்? வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்" —திருவள்ளுவர்.

சென்றது காலம் சிதைந்த(து) இளமைநலம்
நின்றதுசா வென்று நினைந்துருகி—மன்றில்
நடிக்கின்ற பால்வண்ணர் நாமமெண்ணு மாந்தர்
படிக்கின்ற நூல்எல்லாம் பாழ். –அதிவீரராம பாண்டியர்

இறைவனுடைய திருவடியில் அன்பில்லாதவர் கல்வியின் பெருக்காலும், குலத்தின் முறுக்காலும் நன்மையடைய மாட்டார்.

கற்றதனுற் றெல்வினைக் கட்டறுமோ நல்லகுலம்
பெற்றதனுற் போமோ பிறவிநோய்—உற்றகடல்
நஞ்சுகந்து கொண்டருணை நாதனடித் தாமரையை
நெஞ்சுகந்து கொள்ளா நெறி. — அருணகிரியந்தாதி

ஆதலால், மனிதப் பிறப்புக்கு இறை வழிபாடு இன்றியமையாதது என வுணர்க. ஒரு மாவட்டத்திற்கும் மற்ஞெரு மாவட்டத்திற்கும் அரசாங்கத்தார் ஓர் எல்லைக்கல் அமைத்திருப்பது போல், விலங்குகட்கும் மனிதனுக்கும் இடையில் இட்ட எல்லைக்கல் இறை வழிபாடாகும். இறை வழிபாடு இல்லாத மனிதன் விலங்கெனவும், இறை வழிபாடு செய்கின்ற விலங்கு, தேவன் எனவும் உணர்க.

திருச்சிராப்பள்ளிக்கு அருகில் எறும்பு வழிபட்ட திருவெறும்பூரும், யானை வழிபட்ட திருவானைக்காவும் காட்சி தருகின்றன. எறும்பு முதல் யானை ஈருக எல்லா வுயிர்களும் இறைவனை வழிபடவேண்டும் என்பதும் போதருகின்றது.

எறும்புகடை யானைதலை ஈசனைப்பூ சித்துப்
பெறுங்கதிகண் டுந்தேருர் பேய்கள்—அறிந்த
உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையாய் வைக்கப்படும். — முதுமொழிமேல் வைப்பு

வழிபடும் முறை

கோயிலில் வழிபடுவோர் நீராடி, தூய ஆடை அணிந்து, சமயச் சின்னங்கள் தரித்து, அன்புடனும், ஆசாரமுடனும் கோயிலுக்குச் செல்லுதல் வேண்டும்.

கொடி மரத்திற்கு வெளியே விழுந்து வணங்குதல் வேண்டும். உள் பிராகாரங்களில் விழுந்து வணங்குதல் குற்றம்.

விநாயகரை ஒரு முறையும், சிவமூர்த்தியை மூன்று முறையும், அம்பிகையை நான்கு முறையும் வலம் வருதல் வேண்டும்.

கோயிலில் ஒருமைப்பட்ட மனதுடன் வழிபாடு செய்ய வேண்டும். கோயிலில் வழிபடுவோர் வீண் வார்த்தைகள் பேசுவதும், எச்சில் துப்புதலும், பிற தீமைகள் செய்தலுங் கூடா. அர்ச்சகர் தரும் விபூதி பிரசாதங்களைப் பய பக்தியுடன் இரு கரங்களாலும் ஏந்திப் பெறுதல் வேண்டும். பெற்ற பிரசாதத்தைக் கீழே சிந்துதலும் ஒரு புறத்தில் எறிவதும் பெரும் பாவமாகும். சண்டேசுவரர் மீது நூல் இடுவதும், சிவலிங்கத்திற்கும் நந்தி தேவருக்கும் இடையே போவதும் குற்றமாகும்.

கோயிலில் பிரசாதங்களை உண்டு கோயில் தூண்களில் துடைப்பது அனுசிதமாகும். கோயிலில் படுத்து உறங்குவோர் மறுபிறப்பில் மலைப் பாம்பாகப் பிறப்பார்கள். வழிபாடு முடிந்த பின் கொடி மரத்தின் அருகிலிருந்து வடதிசை நோக்கி யமர்ந்து மூலமந்திரம் ஜெபிக்க வேண்டும். நன்கு இனிமையாக தோத்திரப் பாடல்களை அதிகம் சப்தம் போடாமல் இனிய குரலில் துதிக்க வேண்டும். கோயில் விளக்குகளில் எண்ணெய் இடுதல் வேண்டும்.

"விளக்கிட்டார் பேறு சொல்லில் மெய்ந்நெறி ஞானமாகும்"

— *அப்பர்*

கோயிலில் அணைகின்ற விளக்கை அபுத்தி பூர்வமாகத் தூண்டிய எலி, பலிச் சக்ரவர்த்தியாகப் பிறந்து புகழ் பெற்றது.

"நீருகின்ற நெய்யருந்த நேரெலியை மூவுலகும்
ஆளுகின்ற மன்னவனாய் ஆக்கினையே" — *திருவருட்பா*

## வீட்டு வழிபாடு

இனி, நாள் தோறும் குடும்பத்தில் உள்ளோர் அனைவரும் ஒன்று கூடி காலை அல்லது மாலையில் வழிபட வேண்டும். வீட்டுத் தலைவன் ஒரு பாடலைச் சொல்ல ஏனையோர் அதனை வழிமொழிந்து சொல்ல இறைவனைக் காதலுடன் வழிபாடு செய்ய வேண்டும். இதனால் குடும்பத்தில் ஒற்றுமை உண்டாவதுடன் அந்த வீட்டில் தெய்வ கடாக்ஷமும் திருமகள் விலாசமும் உண்டாகும்.

## கூட்டு வழிபாடு

ஒரு தனி இழையை எளிதில் அறுத்து விடலாம். பல இழைகள் ஒன்றுபட்டுத் திரித்த கயிறு (வடம்) தேரை இழுத்து விடும். அதுபோல், பல அன்பர்கள் வாரத்திற்கொரு நாள் கோயிலில் ஒன்றுபட்டு கூட்டு வழிபாடு செய்தால் திருவருளை ஈர்த்துவிடலாம். முஸ்லீம் அன்பர்கள் தினம் ஒன்றுக்கு ஐந்து வேளை தவறாமல் தொழுவதும், கிறிஸ்தவ அன்பர்கள் ஞாயிறு தோறும் ஆண் பெண் அடங்கலும் தங்கள் தேவாலயத்திற்குச் சென்று நியதியாகத் தொழுவதும் போல், இந்துக்களாகிய நாம் குறிப்பிட்ட நாட்களில் ஆங்காங்குள்ள ஆலயங்களில் நியதியாக வழிபடுவது மிகமிக அவசியமாகும். அண்ணல் காந்தியடிகள் இறுதியாகப் பிரார்த்தனைக் கூட்டம் நாள் தோறும் நடாத்தி முடிவில் பிரார்த்தனைக் கூட்டத்திலேயே ஆத்ம சாந்தியடைந்தார். ஆதலால் அன்பர்கள் காதலாகிக் கசிந்து கடவுளை வழிபட்டு இகபர நலன்களை எளிதில் பெறுதல் வேண்டும்.

இவ்வாறு திருக்கோயிலில் வழிபாடு செய்வதற்கு ஏற்ற தெய்வத் தமிழ்ப் பாடல்களைத் தொகுத்து வெளியிட்டிருக்கின்றோம். இவைகளை அன்பர்கள் அவசியம் மனப்பாடம் செய்து கொண்டு, ஆலய வழிபாடு செய்து பிறவிப் பிணியை ஒழித்துப் பேரின்பப் பெருவாழ்வைப் பெறுவார்களாக.

# கொடை

பேராசிரியர்: திரு. E. S. வரதராஜய்யர் அவர்கள்,
புறு - 11.

"இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

என்றார் வள்ளுவப் பெருந்தகையார்.

"தான் ஏழை, இல்லாதவன்" என்று இரக்கப்புகுமவன் கூறும் இழிவான கூற்றைத்தான் பிறர்க்குச் சொல்லாமையும் பொருளைத்தருதலும், நல்ல குடிப்பிறந்தாரிடம் உண்டு என்பது இதன் பொருள். மற்றும் ஒருவன் வந்து தான் ஏழை என்ற சொல்லும் சொல்லைச் சொல்லுமுன்பே அவன் குறிப்பறிந்தீதல் என்றும், பொருள் ஈயப்பெற்றுக் கொண்டவன் பிறனொரு வனிடம் சென்று தான் இல்லாதவன் என்று சொல்லாதபடி யீதல் என்றும், பொருள் பெற்றான் ஒருவன் தன்னிடம் மற்றொருவன் இரப்ப, அவனுக்கு இல்லை என்னுதபடி ஈதல் எனவும், கொடைப் பண்பில்லாவிடின் பலரும், அருள்இலன், அன்பிலன் என்ற பிறர்க்கூற்றும் இடமில்லாத வண்ணம் ஈதல் எனவும் பலவகை யாக இக்குறட் பாவுக்கு விளக்கம் தந்தார் தமது விநாயக புராணத்தில் உச்சிமேற் புலவர்கொள் கச்சியப்ப முனிவர். கொடையே எவர்க்கும் எப்பேறும் கொடுக்கும். நெறியிற் பிறழாத கொடையே யாரும் தன் வழியினொழுகச் செய்யும். குறைதீர்ந்த, கொடையே பகையை உறவாக்கும் என்று கூறினர் புலவர். 'குறிப்பறிந்தீதலே கொடை' என்றார். ஔவையார். தண்டாமலீவது தாளாண்மை, தண்டி யடுத்துக் காலீவது வண்மை, யடுத்தடுத்துப் பின் சென்றால் ஈவது காற் கூலி என்றும் பகர்ந்தார்.

பண்டைத் தமிழ் உலகில், தலை, இடை, கடை என்ற வள்ளல்களிருந்தனர் என்று கேட்கப்படுகிறது. கொடுப்பதிலும் வரையறையின்றிக் கொடுப்பதும் உண்டு. இதனைக் 'கொடை மடம்' என்பர். கார் காலத்தில் அழகுறச் சிறகுவிரித்தாடிய ஓர் மயிலைக் குளிரில் விறைப்பதாக எண்ணி ஓர் விலை யுயர்ந்த போர்வையைப் பேகன் என்ற வள்ளல் அளித்தான். முல்லைக்குத் தேரை யுதவிய பாரியைப் பற்றிக்கூறிய கபிலர் 'பாரி ஒருவனும் அல்லன், மாரியும் உண்டீண்டுலகு புரப்பதுவே' என்று நயம் பெறப் பாரிக்கு மாரியை உவமித்தார். குறள் வடிவில் வந்து மூவடி மண்ணிரந்த வாமநனுக்கு, அவன் கேட்டது தருவதாகக்கூறிய மகாபலியை அவன் அமைச்சனும் ஆசானுமான சுக்கிரன் தடுத்தபோது அந்த மன்னன்,

'வெள்ளியை யாதல் விளம்பின மேலோர்
வள்ளியராக வழங்குவர்' என்றும், ஈந்த
வரல்ல திருந்தவர் யாரே'

என்றும் கூறிக் கண்டித்தான்.

'வாதக்கோன் பின்னையென்றான் வத்தவர்கோன் நாளையென்றான்
யாதவர்கோன் யாதொன்றுமில்லை யென்றான் — ஆதலால்
வாதக்கோன் பின்னையினும் வத்தவர்கோன் நாளையினும்
யாதவர்கோன் இல்லை யினிது'

என்றார் ஔவையார். கொடைப் பலதிறப்படுமேனும் உணவுக் கொடை சாலச் சிறந்தது என்பர். 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்பது மணிமேகலை, 'அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன் பெற்றான் பொருள் வைப்புழி' என்றார் பொய்யில் புலவர். 'அற்றார் அழிபசி தீர்த்த பொருள் பின் தனக்கே வந்துதவும்' என்று இதற்குக் கருத்துரைத்தார் பரிமேலழகர். பொருள் சாலப்படைத்து அதனைப் பல வகை வங்கிகளில் ( Banks ) போடுகின்றனர். அந்தத் தொகையும் சமயங்களில் கிடைக்காமல் போய்விடுகிறது. எனவே திருவள்ளுவர் பொருளைப் போற்றி வைப்பதற்குச் சிறந்த வழி வகுத்தார். 'வறியார்க் கொன்றிவதே யீகை' என்றபடி அவர்கட்கு அளிக்கும் உணவும் நிதியும் சிறந்த புண்ணியச் செயல்கள் ஆதலின் அப்பொருள் பின் தனக்கே வந்துதவும் என்பது கருத்து மற்றும்

'பாத்தூண் மரீஇயவனைப் பசியென்னும் தீப்பிணி தீண்டலரிது' என்றபடி, தான் உண்ணும் உணவைப் பிறர்க்கும் பகுத்துத் தருபவனைப் பசி என்னும் நோய் பற்றாது. திருத்தக்க தேவர் தமது சிந்தாமணியில் இக்கொடையின் பெருமையை வற்புறுத்தும் முறையை நோக்குவோம்.

'மண்ணார் சட்டி கரத்தேந்தி மரநாய் கவ்வும் காலினராய்
அண்ணாந் தேங்கி யிரப்பாரை யறிந்தோ மறிந்தோம் அம்மம்மா
பண்ணார் மொழியார் பாலடிசில் பரிந்தங்கூட்ட முகமதிருப்பி
யுண்ணா நின்ற போதொருவர்க்குதவா மாந்தர் இவர்தாமும்

தெருவில் மண் சட்டியைக் கையில் தாங்கி, மரநாய் பின் பற்றிக் கடிக்கவர, தலை நிமிர்ந்து விம்மியிரக்கின்றார்களே, அவர்களின்னா ரென்று தெரிந்து கொண்டேம். அவர்கள் யாவர் எனில், தேன்போன்ற, சொற்களையுடைய தம் மனைவிமார் அன்புடன் உணவூட்டத் தாம் உண்ணும் போது, 'பல்லெலாம் தெரியக் காட்டிப் பருவரல் முகத்திற் கூட்டிச், சொல்லெலாம் சொல்லி நாட்டித் துணைக் கரம் விரித்து நீட்டி, மல்லெல்லாம் அகல ஒட்டி மானமென்பதனை வீட்டி', யிரந்து வந்தவனுக்கு, ஒன்றும் கொடாதிருந்தவர் தாம் இவர் என்று சுவைபடக் கூறினர். 'ஈந்தே கடந்தான் இரப்போர் கடல்' என்று தயரதனைப் புகழ்ந்தார் கம்பநாடர். மற்றொர் வகையிலும் கடப்பதுண்டு. 'இரப்போர் வந்து, தருநிகர் கரத்தாயென்று சாற்றினும் கொள்ளாராகிக், கருணை சற்றின்றியெல்லைக் கடந்திடத் துரந்து மீளும்' பெருந்தகைகளும் உண்டு. 'எனதெனா தென்றிருக்கும் ஏழை பொருளை யெனதெனா தென்றுரைப்பன் யானும், தனதாயின், தானும் அதனை வழங்கான் பயன் துவ்வான், யானுமதனையது' என்றார் ஓர்புலவர். 'வழங்கலும் துய்த்தலும்' தேற்றாவிடுக்குடை, யுள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம் இல்லத், துருவுடைக்கன்னியரைப் போலப் பருவத்தால், ஏதிலான் துய்க்கப்படும்; என்பது நாலடியார். "நம்பன் அடியவர்க்கு நல்காத் திரவியங்காள், பம்புக்காம், பேய்க்காம், பரத்தையர்க்காம்" என்றார் ஓர்புலவர். "செல்வத்தின் பயனே யீதல், துய்ப்பெமெனினே தப்புந பலவே" என்றார் ஓர் சங்கப்புலவர்.



இடமிருந்து வலம்:. 1. T. சேஷாத்திரி, XI Std, (ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் நினைவுத் தேவாரப் போட்டியில் இரண்டாம் பரிசும், ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப்போட்டியில் முதற் பரிசும் பெற்றவர்) 2. ஸ்ரீ P. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள், B. A., B. T., தலைமை ஆசிரியர், ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி, ஸ்ரீவைகுண்டம் 3. K. திருமலை பால சுப்பிரமணியன், XI Std. ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் போட்டியில் இரண்டாவது பரிசு பெற்றவர்.



ஸ்ரீ மங்கையர்க்கரசியார் நினைவுப் பரிசு
1966ல் பெற்ற ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர
சுவாமிகள் அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி
மாணவிகள்



ஸ்ரீ மாசிலாமணி தேசிகஞானசம்பந்தர் நினைவு பரிசு
1965-66ல் பெற்ற ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்
ஆண்கள் உயர்நிலைப்பள்ளி ஹிந்தி ஆசிரியர்
திரு. T. K. நாராயணன்

சிறந்த கொடை வள்ளல்கள் 'இல்லது நோக்கி இனிவரவு கூருமுன், நல்லது வெஃகியீவார்' என்னும் நிற்பாடிய அலங்கு செந்நாப், பிறரிசை நுவலாமை, ஓம்பாதீயும் ஆற்றல் எங்கோ என்றும் 'பிறன் கடை மறப்ப நல்குவன் செயினே' என்றும் கூறப்பட்டுள்ளன.

'செருமா வேற்சென்னி தென் னுறந்தையார் தம்
பெருமான் முகம் பார்த்த பின்னர் — ஒருநாளும்
பூதலத்தோர் தம்மைப் பொருள்நசையாற் பாராவாம்
காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்'

என்பது தண்டியலங்கார மேற்கோட் செய்யுள். 'இன்மையால் சென்றிரந்தார்க், கில்லையென்னு தீந்துவக்கும், தன்மையார்' என்பது ஆளுடைய பிள்ளையார் திருவாக்கு. ஈதற்பணிலில்லாரைப் பற்றிக் கூறுங்கால்,

'சுற்றும் கருங்குளவி சூரைத் தூருரியப்பே
யெற்றும் சுடுகாட்டிடி கரையின் — புற்றில்
வளர்ந்த மடற்பனைக்குள் வைத்ததே னெக்கும்
தளர்ந்தோர்க் கொன்றியாத்தனம்

என்றும்

'கருங்குளவிச் சூரைத்தூற்றிச்சங் கனிபோல
வருந்தினக் கொன்றியாதான் வாழ்க்கை – அரும்பகலே
இச்சித்திருந்த பொருள் தாயத்தார் கொள்வார்'

என்றும் கூறினர். தயரதனைப் பற்றிக் கூறும்போது அவனுடைய 'கையார் புனலாய் நனையாதனவைகள் இல்லை' யென்று புகழ்ந்தார் கல்வியிற் பெரியவர் என்று கூறப்பட்ட கம்பநாடர்.

தனக்கு நல்ல வாழ்வும் நீண்ட ஆயுளும் தரவல்ல ஓர் அரிய நெல்லிக் கனியைத் தான் உண்ணுமல் தனக்குதவிய அதிகமானைப் பாராட்டி ஔவையார்

'நீல மணிமிடற் றொருவன் போல,
மன்னு பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட,
சிறியிலை நெல்லித் தீங்கனி குறிடா

தாதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத்தனையே.'

என்று புகழ்ந்தார் தமிழ் மூதாட்டியார். இதன் பொருள்,

'நீ, நீலகண்டன் போல நீடுவாழ்வாயாக! நீ ஓர் மலையின் கண் வளர்ந்திருந்த ஓர் நெல்லி மரத்தின் கனியை, எளிதில் பெற முடியாது என அறிந்திருந்தும், பெறும் பயனை எனக்குக் கூருது நின் உள்ளத்திலேயே அடக்கிக் கொண்டு, எனக்கு இறப்பு ஒழியுமாறு தந்தனையே' என்பது. நெல்லிக் கனி ஓர் கற்பம். அதனிடம் உயர்ந்த சத்துள்ளது. தற்காலத்தில் கூட 'ச்யவநப்பிராசம்' என்ற மருந்து, நெல்லிச் சத்தினின்றே தயாரிக்கப்படுகிறது. தன் உயிரையும் பொருட் படுத்தாது பலர் பிறர்க்குதவி யுள்ளனர். தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயுவை யும், ஓர் புருவின் பொருட்டுத் துலைத்தட்டேறிய சிபி மன்னனை யும் காண்க.

'கார்த்திகைக்குப் பின் மழையில்லை, கன்னனுக்குப் பின் கொடையில்லை' என்ற ஓர் முதுமொழியுண்டு. பாரதப் போரில் 17-ஆம் நாளில் பார்த்தன், கன்னன் மீது ஏவிய பாணங்கள் பயனளிக்கவில்லை. அவன் எய்த அம்புகூட அறக்கடவுள் தானே ஏற்றுக் கன்னன் மீது அவை தைக்காமல் செய்தது. பார்த்தன், கண்ணனிடம் முறையிட, கண்ணபிரான் ஓர் பார்ப் பன வடிவத்துடன் கன்னனை யணுகித் தான் ஒன்று வேண்டுவ தாகக் கூறுகின்முன். கன்னன் அப்பொழுது,

"ஆவியோ நிலையிற் கலங்கியது யாக்கை யகத்ததோ புறத்ததோ
அறியேன்"

என்று கூறிப் பின்னர்க் கண்ணன், கன்னன் செய்துள்ள தவத்தின் பயனைக் தனக்களிக்க வேண்டும் என்று கூறக், கன்னன், இயைந்து தன் மீது தைத்திருந்த ஓர் வாளியைப் பிடுங்கிப் பெருகிய உதிரம் கொண்டு தாரை வார்த்துத் தனது வாக்கை யுறுதி செய்தான். உடனே கண்ணன் பேருவகையினுல் அவனை நோக்கி 'வேண்டுவது வினவுக' என்ற அளவில் கன்னன், 'எத்தனை பிறவிகள் எடுப்பினும் இல்லை யென்றுரைப் போர்க்கில்லை யென்றுரையா இதயம் வேண்டும்' எனப் பகர்ந்

தான். கண்ணபிரான் அவனை நோக்கி 'இதயமட்டும் இருந்தால் அமையுமா; வெறுங்கை முழம் போடுமா? தன்னிடம் ஏராள மாகப் பொருளிருந்தாலல்லவோ பிறர்க்கீதல் கூடும்' என்று கூறி, 'ஈகையும் செல்வமும் எய்தி வாழுமாறு' ஆசி கூறி யருளினன். இங்குச் செல்வத்தை முன்னர்க் கூறி ஈகையைப் பின்னர்க் கூறுவதே முறை; ஆயினும் நட்பும் தயையும் கொடையும் ஆன்மாவுடன் ஒட்டி நிகழும் பிறவிப் பண்புகள் ஆகலில் 'ஈகையும் செல்வமும் எய்தி' என்று மொழிந்தார். செங்கை என்பதற்குக் கொடுத்துச் சிவந்த கை என்றுரைப்பர் உரைகாரர். 'ஈந்து சிவந்ததுஉயர்சீதக் காதியிருகரமே'என்றது காண்க. ஈகையின் உயர்வையும் பயனையும் கூறவந்த ஓர் புலவர்,

'கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர்
இடித்து முழங்கியதோர் ஒசனையோர் கேட்பர்
அடுத்துதொரு மூவுலகும் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படும் சொல்'

என்றார். குணில் என்ற சிறு கொம்பினால் அடிக்கப்பட்டு முரசம் என்ற தோற் கருவி ஒரு காதம் வரையில் கேட்கும். இடி முழக்கம் ஓர் யோசனை வரையில் கேட்கும்; ஆனால் சான்றோர் கொடுத்தார் எனப்படும் சொல் மூவுலகும் கேட்கும் என்றார். எனவே கொடையின் பெருமை அளவிறந்தது.

---

'குமரகுருபரன்'

திங்கள் வெளியீட்டின் சந்தா நேயர்களுக்கு ஓர் அறிவிப்பு:

| | |
|---|---|
| தனிப்பிரதி (உள் நாடு) | 0-25 ந. பை. |
| வருடச் சந்தா | ரூ. 3-00 ந. பை. |
| வெளி நாடு வருடச் சந்தா | 6 ஷிலிங் அல்லது ரூ. 4-00 ந. பை. |

நிர்வாக ஆசிரியர்.

# தமிழ் நாட்டில் சைவ சித்தாந்த நூல்கள் தோன்றிய வரலாறு

கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர், சைவசித்தாந்த வித்தகர்,
வித்துவான். திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்,
ஆராய்ச்சியாளர்,
சென்னை.

ஸ்ரீவபெருமான் திருக்கயிலையில் ஸ்ரீ கண்டருத்திரரை அதிட்டித்து (உள்ளே நின்று தூண்டி) சைவ சித்தாந்த சாத்திரங்களை நந்தியெம்பெருமானுக்கு உபதேசித்தருளினர். அவர்பால் அதனை உணர்ந்த சனற்குமார முனிவர், சத்திய ஞானதரிசினிகளுக்கு அதனை உபதேசிக்க அவர் பரஞ்சோதி முனிவர் பெருமானுக்கு உபதேசித்தருளினர்.

பரஞ்சோதி முனிவர் ஒருகால், அகத்தியரைக் காண வேண்டிப் பொதிகைக்கு விமானத்தில் ஏறிச் செல்லுங்கால், தான் ஏறி வந்த வானவூர்தி இடைவழியில் தடைப் பட்டு நின்றது. கீழே நோக்கினர். தெரிந்தது திருவெண்ணெய் நல்லூர். அங்கே வீதியில் விளையாடிக் கொண்டிருந்தார் சுவேதவனப் பெருமாள் என்னும் இளைஞர்.

தமது ஊர்தி தடைப்பட்டு நின்ற காரணத்தைத் திருவருளால் உணர்ந்த பரஞ்சோதி முனிவர் கீழே இறங்கி வந்து அவ்விளைஞர்க்குத் தாம் கேட்டுணர்ந்த சைவசித்தாந்த நூற் கொள்கைகளை உபதேசித்து, தமது குருவின் பெயராகிய சத்திய ஞான தரிசனிகள் என்பதைத் தமிழில் மொழிபெயர்த்து, மெய் கண்டதேவர் எனத் திருப்பெயர் சூட்டித் தம்வழியே சென்றனர். அது முதலாக இப்பொழுது வழங்கும் சைவ சித்தாந்த நூற்கொள்கைகள் தமிழ் நாட்டில் நிலவி வருகின்றன.

இவ்வரலாற்றைச் சிவஞான போதத்தில் சிறப்புப்பாயிரத்தில்,

"மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்

பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமையோனே"

எனவரும் பகுதியால் உணர்க.

### தமிழில் சைவ சித்தாந்த நூல்கள்

இங்ஙனம் பரஞ்சோதி முனிவரால் உபதேசிக்கப் பட்டு, தாம் உணர்ந்த சிவஞான போதம் என்னும் நூலை மெய்கண்ட தேவநாயனர், முதல் நூலாக வெளியிட்டனர். அவர் மாணவர் பரம்பரையிலும், பிறரும் இம் முதல் நூலுக்கு வழி நூலாகவும் சார்பு நூலாகவும் பதினன்கு நூல்களை இயற்றினர்.

### சிவஞானபோதம்

இவற்றுள் சிவஞானபோதம் நூற்பா என்னும் சூத்திர வடிவில் அமைந்த பன்னிரண்டு சூத்திரங்களை உடையது. அவை சில்வகையெழுத்தில் பல்வகைப் பொருளை அடக்கி, திட்ப நுட்பம் செறிந்தனவாக வுள்ளன. அவை பொதுவதிகாரம், உண்மை அதிகாரம் என்னும் இரு பெரும் பிரிவுகளையும், முதல் அதிகாரம் — பிரமாணஇயல், இலக்கணஇயல் என்னும் இரண்டு உட்பிரிவுகளையும், இரண்டாம் அதிகாரம் — சாதன இயல், பயனியல் என்னும் இரு உட்பிரிவுகளையும் உடையன. ஒவ்வொரு இயலும் மும்மூன்று சூத்திரங்களையுடையன.

இந்நூலுக்குத் திருவாவடுதுறை ஆதீனம் மாதவச் சிவ ஞான யோகிகள் ஓர் பேருரை இயற்றியுள்ளனர். இவ்வுரைக்கு மாபாடியம் எனப்பெயர். வடமொழியில் மகாபாஷ்யம் என்னும் இவ்விதப் பேருரைகள் பலவுள்ளன. தமிழில் இவ்வொரு நூலே மகாபாடியமாகத் தோன்றியதால் சிவஞான முனிவர் பெருமானுக்குத் திராவிட மகாபாஷ்யகர்த்தா என்று பெயர் வழங்கப் படுகிறது. (திராவிடம் - இங்குத் தமிழ்) இப்பேருரையேயன்றிச் சிற்றுரை ஒன்றும் இவரால் எழுதப்பட்டுள்ளது.

### சிவஞானசித்தியார்

இது சிவஞானபோதத்தின் வழிநூலாக மெய்கண்டதேவ நாயனரின் மாணவர் அருணந்தி சிவாசாரியார் என்னும்

அறிஞர் பெருமானுல் இயற்றப்பட்டது. சுபக்கம், பரபக்கம் என்னும் இரு பகுதிகளை உடையது.

அவற்றுள் ஏனைய சமயங்களின் கொள்கைகளைக் கண்டித்து சைவக் கொள்கைகளை நிலைநாட்டுவது பரபக்கம். சைவ சமயக் கொள்கைகளை, காரண காரியங்கள் முதலானவற்ரேடு நன்கு விளக்குவது சுபக்கம். இச்சித்தியார் 628 ஆசிரிய விருத்தங்களால் இயன்றது இது சிவஞானபோதத்தின் வழி நூல் என்பதற்கு ஏற்கத் தான் கூறும் பொருள்களை 1 ஆம் சூத்திரம், 2-ஆம் சூத்திரம் எனப் பன்னிரண்டு பிரிவுகளால் பிரித்துக் கூறுகிறது. எனவே ஒவ்வொரு பிரிவும் சிவஞானபோதத்தில் ஒவ்வொரு சூத்திரத்திலும், நுதலிய பொருள்களை விரித்து நன்கு விளக்கிக் கூறுகிறது. இன்னும் வழி நூல் என்பதற்கு ஏற்க முதல் நூலில் கூறும் பிரிவுகளையே தனக்கும் உரியதாகக் கொண்டு, பிரமாணஇயல், இலக்கணஇயல், சாதனஇயல், பயனியல் என வகுத்துக் கொள்கிறது. இதைப்பற்றி வழங்கும் பழமொழி 'சிவனுக்குமேல் தெய்வம் இல்லை. சித்தியார்க்கு மேல் சாத்திரம் இல்லை' என்பது.

## இருபாஇருபஃது

இது தமிழ்மொழியில் வழங்கும் சிறுநூல்களாகிய பதிகம், பிள்ளைத்தமிழ், கலம்பகம் போன்ற சிறுநூல்களின் வகைகளில் ஒன்ருகும். இருபது பாக்களை உடையது. ஒரு வெண்பா, ஒரு ஆசிரியம் இணைந்து வந்தது. இது பாச லட்சணத்தைப்பகுத்துக் கேள்வி விடையாகக் கூறுவது.

## சிவப்பிரகாசம் முதலிய எட்டு நூல்கள்

சைவ சித்தாந்த நூல் பதினன்களுள், பாதிக்கு மேற்பட்டதாகிய எட்டு நூல்களை இயற்றியருளியவர் உமாபதி சிவாசாரியார் ஆவர். இவர் இவ்வெட்டு நூற்களைத் தவிர, கோயிற் புராணம், சேக்கிழார் நாயனர் புராணம் என்னும் நூல்களை இயற்றியவர். தில்லைத் திட்தர்களில் சேர்ந்தவர். இவருடைய சமாதிக்கோயில் கொற்றங்குடியில் இருக்கிறது. இக்கொற்றங்குடி சிதம்பரத்திலிருந்து அண்ணமலைநகர்க்குப் போகும் வழியில் இருக்கிறது. முள்ளிச்செடிக்கும், பெற்ருன் சாம்பனர்க்கும்

முக்தி கொடுத்தலாகிய அற்புதத்தைச் செய்தவர். இவர் மறை ஞானசம்பந்தருடைய மாணவர். இவர் இயற்றிய நூல்கள்:- சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்பன.

### சிவப்பிரகாசம்

இது 101 ஆசிரிய விருத்தங்களையுடையது. இந்நூல் சிவ ஞானபோதம், சிவஞானசித்தியார் முதலிய நூல்களிற் கூறிய பொருள்களை நன்கு விளக்குவதால் சிவப்பிரகாசம் என்னும் பெயர் எய்திற்று. இதைப்பற்றி ஒரு பழமொழி 'சிவஞான போதத்தால் சிவஞான உணர்வு உண்டாயிற்று. அதன் வழி நூலால் சிவஞானம் சித்தித்தது. இவர் நூலால் சிவம் பிரகா சித்தது' என்று கூறுவர். இதன் உரையாசிரியர் இலக்கணம் சிதம்பரநாத முனிவர். இவர் காஞ்சிபுரத்தினர்.

### திருவருட்பயன்

இது 101 திருக்குறள் வெண்பாக்களால் அமைந்தது. பதி முதுநிலை, உயிரவைநிலை, இருண்மலநிலை, அருளதுநிலை, அரு ளுருநிலை, அறியுநெறி, உயிரவை விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுத்தருணிலை, அணைந்தோர் தன்மை என்னும் பத்து அதி காரத்துக்கும் பப்பத்துக் குறளையுடையது. சேதுமடாலயம் நிரம்ப அழகிய தேசிகர் உரை செய்துள்ளனர்.

### வினாவெண்பா

இது 13 வெண்பாக்களையுடைது. இது மாயையின் இலக் கணத்தை வினாவின் முகமாக விளக்குவது. திருவாவடுதுறை ஆதீனம் நமச்சிவாயத்தம்பிரான் சுவாமிகள் உரைசெய்துள் ளனர்.

### போற்றிப்பஃறொடை

போற்றி போற்றி என்று வரும் பஃறொடை வெண்பாவில் வருவதால் இப்பெயர் பெற்றது. இப்பஃறொடை வெண்பா என் பது வெண்பாவின் வகையில் ஒன்று. அடிவரையறை இல்லாதது. இது 190 அடிகளை உடையது. ஆன்மாக்களின் பாசத்தைத்

திருவருள் வலியால் ஒழித்து உய்யக்கொள்ளும் இறைவன் திருவருளை எடுத்துப் போற்றிப் புகழ்வது. இந்நூற்கு ஓர் சிறந்த உரையுண்டு. அவ்வுரையாசிரியர் பெயர் தெரியவில்லை.

### கொடிக்கவி

ஒருகால், தில்லை நடராசப்பெருமான் திருவிழாவில் கொடி ஏறும்பொழுது, கொடி ஏருது நிற்க, அது இனிது ஏறும் பொருட்டு இந்நூல் இயற்றியதால் கொடிக்கவி என்னும் பெயர் பெற்றது. இது ஒரு கலித்துறை, மூன்றுவெண்பா, இவற்ருல் இயன்றது. திருவைந்தெழுத்தின் வகையையும் பிறவற்றையும் எடுத்துக்கூறுவது. இந்நூலின் உரையாசிரியர் பெயர் தெரியவில்லை.

### நெஞ்சு விடு தூது

நெஞ்சைத் தூதாக இறைவன்பால் செலுத்தும் நிலையைக் கூறுவதால் இப்பெயர் பெற்றது. இது 258 அடிகளையுடைய கலிவெண்பாவால் இயன்றது. இது சிவாநுபவத்தை விளக்குவது. இதன் உரை, சென்னை, பூவை-அஷ்டாவதானம் கல்யாணசுந்தரமுதலியாரால் இயற்றப்பட்டது.

### உண்மைநெறி விளக்கம்

இந்நூல் ஆறு திருவிருத்தங்களால் இயன்றது. தசகாரியத்தை (பத்துச் செயல்களைப்) பற்றிச் சொல்வது. தசகாரியம்—இறைவன் திருவடி அடைதற்குரிய பத்து செயல்கள், இந்நூல் உரையாசிரியர் பெயர் தெரிந்திலது.

### சங்கற்ப நிராகரணம்

இந்நூல் இருபது அகவற்பாக்களால் இயன்றது. மாயாவாதி முதலியோர் கூறும் கொள்கைகளை எடுத்து, காரணகாரியத்தோடு அவற்றை மறுத்து சைவத்தை நாட்டுவதால் சங்கற்ப நிராகரணம் என்னும் பெயர் பெற்றது. சங்கற்பம்—பிறமதத்தார் கொள்கை; நிராகரணம்—மறுத்து உரைத்து ஒழித்தல். இருபது ஆசிரியப்பாவும், பிறமதத்தார் கூறுவதை ஒரு கவியாலும் அதை மறுத்து உரைப்பது அடுத்த கவியாலும் ஆக மதவாதிகள் கொள்கைகளை மறுத்து உரைப்பது. பாயிரத்தில் இந்நூல் தோன்றிய வரலாறும், இடமும், இந்நூலைப்

பற்றிய பிறவும் கூறப்படுகின்றன. அதில் கூறுவதாவது சகாத்தம் ஆயிரத்து இருநூற்று முப்பத்தைந்தில் திருத் தில்லை யில் நடந்த ஆனிமாத ஆருந்திருவிழாவில் ஒருசமய வாதக்கூட் டம் கூடிற்று. மாயாவாதிகள் முதலிய புறச் சமயத்தார் ஒரு பக்கமும், சைவசமய ஆசாரியர் எண்மர், ஒருபக்கமாகவும் எதிர் எதிர் இருந்து சமயவாதஞ் செய்ததில் பிறமதத்தார் கூறும் கொள்கைகளை மேற்கொண்டு அவற்றைக் காரணத்தோடு தருக்க முறையில் சைவ ஆசாரியர் மறுத்து உரைத்து சைவத்தை நாட்டினர் என்றும், அப்பேரவை சிதம்பரத்தில் தேர் மண்டபத்தில் நிகழ்ந்த தென் றும் அங்கு நிகழ்ந்த சமய வாதங் களில் சைவம் வெற்றி பெற்றமையை அடிப்படையாகக் கொண்டு அவ்விருவர் வாதங்களையும், சைவம் வென்றமையும், ஒரு நூலாக அமைக்கவேண்டுமென்று அறிஞர் விரும்பிய படி இந்நூல் இயற்றலாயிற்று. உரை எழுதியவர் பெயர் தெரிந் திலது. 'ஏழஞ் சிருநூறு எடுத்த வாயிரம் வாழுநற்சகனம் மருவாநிற்ப"—என்பதால் சகாத்தம் 1235க்குக் கி. பி. 1313ஆம் ஆண்டு ஆகிறது, எனவே இந்நூலாசிரியர் காலம் 14 ஆம் நூற்றுண்டு ஆகும்.

### மற்றைய நூல்கள்

மெய்கண்ட சாத்திரம் பதினுன்கனுள் மெய்கண்ட தேவ நாயனரும், அவர் மாணவ வழியினர் இருவரும் இயற்றிய நூல்கள் மேற்கூறிய பதினொன்றிேைடு, இவற்றிற்குத் துணை நூலாகப் பிறர் செய்த நூல்கள் மூன்று. அவை திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், உண்மை விளக்கம் என்பன.

### திருவுந்தியார்

மகளிர் விளையாட்டினுள் ஒன்றுகிய உந்தீபறத்தல் என்னும் செய்யுளின் மேல் வைத்து சைவசித்தாந்த உண்மைகளைக் கூறு வதால் இதற்குத் திருவுந்தியார் என்று பெயர் ஆயிற்று. இவ் வாறே மணிவாசகப்பெருமான் திருவாசகத்தில் திருவுந்தியார் என்ற பகுதியும், பிறர் அவிரோத வுந்தியார் எனக் கூறிய நூல்களையும் காண்க. இது சைவத்தில் கூறும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நாற்பாதங்களுள் ஞானபாதத்திற் குரிய கொள்கைகளை விளக்குவது. இந்நூல் 45 கலித்தாழிசை

களால் இயன்றது. இதன் ஆசிரியர் திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார் என்பவர். இந்நூலின் உரையாசிரியர் திருவாவடுதுறை ஆதீனத்துச் சிற்றம்பலத் தம்பிரான் சுவாமிகள் ஆவர்.

### திருக்களிற்றுப்படியார்

திருத்தில்லையில் பொன்னம்பலத்தின்கண் படியில் அமைத்த கல்லால் இயன்ற ஒரு யானையின் கையில் கொடுக்க, அந்த யானையின் உருவம் உயிர்பெற்று எழுந்து தன் துதிக்கையை நீட்டித் தன்கையில் தந்த நூலை நடராசப்பெருமான் திருவடியின்கண் வைத்தமையால் இந்நூல் திருக்களிற்றுப்படியார் எனக் காரணப்பெயர் எய்திற்று. இச்செயலினாலே சைவ சமயக் கருத்துக்களும் இந்நூலும் எத்தகைய உயர் நிலை உடையன என்று விளங்கும்.

இது 100 வெண்பாக்களால் ஆகியது. திருவுந்தியாரின் ஆசிரியர் திருவியலூர் உய்யவந்ததேவ நாயனாரின் மாணவர் ஆகிய திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார் ஆவர். இந்நூல் திருவுந்தியாரின் வழி நூலாக அந்நூலிற் கூறிய கருத்துக்களை விரித்து விளக்குவது. திருவாவடுதுறை ஆதீனத்துச் சிவப் பிரகாசத் தம்பிரான் சுவாமிகள் இதற்கு உரை எழுதியுள்ளனர்.

### உண்மைவிளக்கம்

திருவதிகை மனவாசகங்கடந்த நாயனார் இந்நூலாசிரியர் ஆவர். இவரை மெய்கண்டதேவ நாயனாரின் மாணவர் என்பர். மெய்கண்டதேவ நாயனாரை முன்னிலைப்படுத்தி அவர் திருமுன் ஒரு மாணவன் சைவசித்தாந்த நூற்கருத்துக்களை வினவி அறிவதாக இந்நூல் அமைந்துள்ளது. இதனை

‘பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதாநந் தப்பொருள்
மெய்காட்டும் மெய்கண்டாய் விண்ணப்பம் — பொய்காட்டா
மெய்யா திருவெண்ணெய் வித்தகா சுத்தவினு
வையாநீ தான்கேட் டருள்’

என்னும் இந்நூலின் செய்யுளால் அறிக. இது கொண்டு இவரை மெய்கண்டாருடைய மாணவர் என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும்? அவர் மாணவர் ஒருவர் உண்மை விளக்கம்

எழுதும் அறிவு உடையவராயின் சந்தானகுரவர் வரிசையில் சேர்த்து எண்ணப்பட்டிருப்பார். அப்படி சேர்க்கப்படாமையால் இவரை அவருடைய மாணவர் என்பது ஐயுறத்தக்கதாய் உள்ளது.

இந்நூல் 54 வெண்பாக்களையுடையது. இது சைவசித்தாந்தத்தில் கூறும் 36 தத்துவங்களையும் , ஆணவம், மாயை, கன்மம் என்னும் பாசங்களின் இயல்பையும், பதிஇயல்பையும், நடராசப்பெருமான் திருவுருவத் தத்துவத்தையும், திருவைந்தெழுத்தின் பொருள்களையும் உட்கருத்துக்களையும் விளக்குவது. இந்நூலுக்கு உரை செய்தார் பெயர் தெரிந்திலது.

இவை பதினுன்கும் மெய்கண்ட சாத்திரம் எனப்படும். இவற்றை ஓதி வருவது ஒரு சிவபுண்ணியமாகும். இதை நாடோறும் ஓதுதல் ஞானபூசை எனப்படும் என்பர் ஆன்ரோர். இந்நூல்கள் பதினுன்கையும் பற்றிக் கூறும் வெண்பா,

"உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம் — வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று."

என்பதாகும்.

---


"ஞானசம்பந்தம்"

அரிய கட்டுரைகளுடன் வெளிவரும் திங்கள் வெளியீடு

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்திலிருந்து வெளிவருகிறது. சமயப்பொருள் முதலியவை குறித்த தெளிவான கட்டுரைகள் அடங்கியது. சைவ சமயத்தின் உண்மைகளை உணர்வதற்குப் பெருந்துணையானது. சந்தாத்தொகையைக் கீழ்க்கண்ட முகவரிக்கே அனுப்பிவைக்கவும்.

ஆண்டுக் கையொப்பம்.

உள்நாடு ரூ. 3 - 00 * வெளிநாடு ரூ. 4 - 00

செயலாளர், "ஞானசம்பந்தம்" அச்சகம்,
தருமபுரம், மாயூரம் P. O.

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 17, இதழ் 12-ன் தொடர்ச்சி]

## III

## SUNDARAMURTI SWAMI

(Abbreviated as SUNDARAR)

76. பாதியோர்பெண்ணைவைத்தாய்படருஞ்சடைக்கங்
கைவைத்தாய்
மாதர்நல்லார்வருத்தமதுநீயுமறிதியன்றே
கோதில்பொழில்புடைசூழ்குண்டையூர்ச்சிலநெல்
லுப்பெற்றே
னாதியேயற்புதனேயவையட்டித்தரப்பணியே.

76. Thou art half woman Thyself;
Ganga is in Thy long hair.
Full well canst Thou comprehend
Burden of women so fair.
Kundaiyur circled with gems,
There didst Thou give rice to-day.
Source of all, wonderful one,
Bid it be sent me, I Pray.

(To be continued)

---

Reproduced with the kind permission of Oxford University Press, Calcutta.

(N.B. Copies available for sale at the above Press.)

# முப்பாலில் முரண்?

**திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள் M. A.,**
துணைத் தமிழ்ப் பேராசிரியர்,
சரபோசி கல்லூரி, த ஞ் சா வூ ர்.

---

அறிதோறும் அறியாமை கண்டற்றுல், அருந்தமிழ் இலக்கியத்தை ஆழ்ந்து கற்கும்போது ஐயம் பல எழக் காண்கிருேம். இராமன் ஏன் காட்டிற்குப் பதினான்கு யாண்டுகள் செல்ல வேண்டும்! ஒன்று பத்தாகவோ அல்லது பதினைந்தாகவோ இருக்கலாகாதா? குறிப்பாக ஏன் 14 யாண்டுகள் வனவாசம் மேற்கொள்ள வேண்டும்? காடுறை வாழ்க்கை 12 யாண்டுகள், கரந்துறை வாழ்க்கை 1 ஆண்டு எனப்பட்டதேன்? ஏழ்பிறப்பு என்று ஏன் பிறப்பு ஏழாகக் குறிக்கப்பட்டுள்ளது? கற்பில் சிறந்தவள் கண்ணகியா? மாதவியா? வள்ளுவர் வற்புறுத்துவது ஊழா? முயற்சியா? வலியுறுத்துவது இல்லறமா? துறவறமா? என்பன போன்ற எண்ணற்ற 'இலக்கிய ஏன்கள்' நம் இதயத்தில் எழக்காண்கிருேம்.

அம்முறையில்தான் ஈவதும் ஏற்பதும் பற்றிய ஐயப்பாடு அரும்புகின்றது. வள்ளுவர் இரக்க என்று கூறி, அடுத்து இரக்க அச்சப்படவேண்டும் என்கிருர். இவர் மட்டுமா? பெரும்பாலும் எல்லாப் புலவர்களும் ஈய வேண்டும் என்கின்றனர்; ஆனுல் அடுத்தாற் போல் ஏற்கக் கூடாது என்றல்லவா இயம்பி விடுகின்றனர். ஏன் அப்படிக் கூறவேண்டும்? ஒன்று ஈய வேண்டும்—ஏற்கலாம் என்ருவது, அல்லது ஈய வேண்டாம்—ஏற்கவும் கூடாது என்ருே கூறிவிடலாமே! அங்ஙனமின்றி ஈயவேண்டும், ஏற்கலாகாது என முரண்பட மொழிவானேன்? அவர்களுக்கே குழப்பமா? இது முன்னுக்குப் பின் முரண்பட மொழிவதாகாதா? இது இன்னும் தீராத சிந்தனைக்குரிய சர்ச்சை

யாகவுளது. இச்சிக்கலுக்குச் சிறு விளக்கம் தருவதே இக் கட்டுரையின் இனிய நோக்கமாகும்.

மறைந்த—ஆனால் மறையொன்று தந்துசென்ற வள்ளுவனார், பொருட்பால்—குடியியலில், நல்குரவு என்னும் அதிகாரத்தின் இறுதிக் குறளில், இவ்வுலகில் தனக்கென நுகர்தற்கு எப்பொருளும் இல்லாத ஒருவன் முற்றும் துறவாதிருப்பது, பிறர் விட்டு உப்பிற்கும் கஞ்சிக்கும் எமனாக இருப்பதாகும் என்கிறார்.

> 'துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
> உப்பிற்கும் காடிக்கும் கூற்று' (குறள் 1050)

இங்ஙனம் கூறியவர் . அடுத்து வைப்பது 'இரவு' என்னும் அதிகாரமாகும். நல்குரவின் இறுதியில் இப்படிக் கூறியவர், அடுத்து முரண்படு முறையில் 'இரவு' என்று வைத்துள்ளாரே எனத் திகைத்த நாம், அடுத்துக்காணும் அதிகாரம் 'இரவச்சம்' என்பது, என்ன? இன்னொரு முரணா? ஒருமுறைதான் மாறாகக் கூறினாரென்றால், மறுபடியுமா மறுத்து மொழிவது? பல பக்கங்களுக்கு முன் கூறியவர் மறந்து இங்கு மாறுபட்ட கருத்தை மொழிந்துள்ளார் என்றாலாவது, ஏதோ தவறி மறதியால் கூறியிருக்கலாம் எனலாம். ஆனால் இங்கோ அடுத்தடுத்து, ஒன்றன் பின் ஒன்றாக முன்னுக்குப் பின் முரணாக மொழிவானேன்? அதுவும் வான்புகழ் வள்ளுவரா வழுப்பட மொழிவது? அதிலும் எப்பாலவரும் போற்றும் முப்பாலில் ஒரு முரணா? தமிழ் மறையில் ஒரு மறுவா?

வாழ்வைத் துறை போக வுணர்ந்த வள்ளுவர், 'எல்லாப் பொருளும் இதன்பாலுள, இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லையால்' எனுமளவிற்கு ஆய்ந்துணர்ந்து கூறும் கூர்த்த மதி மிகு குறளாசிரியரா—சிறுபுலவரும் செய்யாத இப் பிழையினைச் செய்வார்? பெரும்புலவர் இப்பிழை இழைப்பரோ? 'எண்ணித் துணிக' என்றவராயிற்றே! பயனில சொல் பாராட்டாத செறிவுசால் செந்நாப் போதாரன்றோ?'Even Homer sometime nods' – 'ஆனைக்கும் அடி சறுக்கும்' என்னுமாப் போல, வள்ளுவர் வழுக்கி விழுந்தாரா? வழுவினாரா? வழுக்காணாத வள்ளுவர்

வழுக்கியும் இங்ஙனம் கூறுரே! அங்ஙனமிருக்க இங்ஙனம் இயம்பியது ஏன்? பெரியோர் முரணில் பொருளில்லாமல் இருக்காது? ஏதேனும் ஒருகாரணம் இருக்கத்தான் வேண்டும். காரணமின்றி இங்ஙனம் குறளாசிரியர் கூறியிருக்க மாட்டார். எனவே குறளாசிரியர் கருத்தினைக் காணமுனைவோம். இது குறளாசிரியர் கருத்தினைக் காணும் முயற்சி; முயற்சியின் முதற்படி! முடிவினை நாடித் தேடிடும் முயற்சியேயாம். இதுவே முடிந்த முடிபாகாது. ஆய்வுக்கு இறுதி ஏது?

வள்ளுவர் உட்குறிப்பினை ஒருமுன், இரக்கலாம் என்று கூறி — உடனேயே இரக்க அஞ்ச வேண்டும் எனும் வள்ளுவனுர் போலவே, அன்னுர்க்கு முன்னும் பின்னுமாக வாழ்ந்த புலவர்களும் இங்ஙனமே, இயம்பிச் சென்றுள்ளமை எண்ணுவாம். 'கொடு' எனக் கேட்பது இழிந்தது; அதைவிடக் 'கொடேன்' எனல் மிகவும் இழிந்தது. இந்தா வாங்கிக்கொள் என்று கொடுத்தல் உயர்ந்தது; அதைவிட உயர்ந்தது கொள்ளேன் என மறுத்தல் என்கிருர் கழைதின் யானை யார் என்னும் புலவர்.

ஈயென இரத்தல் இழிந்தன்று, அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று;
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று, அதனெதிர்

கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று' (புறம் – 204)

மோசிகீரனுர் என்னும் புலவர் இக்கருத்தினை எடுத்து மொழிகின்ருர் பாருங்கள்:

'ஈயென இரத்தலோ வரிதே' (புறம் – 154)

எரிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனுர் பாண்பசிப் பகைஞனைப் பாராட்டிப் பாடுங்காலை, அவன் திறத்தினைக் கூறுகின்ருர்; அதில் கொடுப்பதின் பெருமையும், கொடாமையின் சிறுமையும் தெளிவாகின்றன.

'நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே
இல்லென மறுக்குஞ் சிறுமையும் இலனே' (புறம்–180)

கலித்தொகையும், 'இல்லென விரந்தோர்க் கொன்றியாமை யிளிவு' (பாலைக்கலி–2) என்கிறது. பம்பு புகழ் கம்பனும், தன் கற்பனை-

கனவு நாட்டில் 'வண்மை யில்லை ஓர் வறுமை யின்மையால்' என்கிறுன். வறுமையே இல்லாமையால் ஆங்கு வள்ளன் மைக்கே இடமில்லையாம். வறுமை இருந்தாலல்லவா அது போக்க இரப்பர்; அதுபோது புரப்பதற்கும் வாய்ப்பிருக்கும். ஆனல் அவரவர்கள் வளமையாக வாழும் போது பிறரிடம் சென்று இரப்பரோ? ஆனல் அதே கம்பர், வேள்விப் படலத்தில்,

'கொள்ளுதல் தீது, கொடுப்பது நன்ருல்' (செய்.–29) என் கிருர். அடுத்து வந்த அவ்வையார் கூட, 'இயல்வது கரவேல்,' 'ஈவது விலக்கேல்'என்றெல்லாம் இயம்பியவர், 'ஏற்பது இகழ்ச்சி' (ஆத்திச் சூடி–8) என்கிருர். அடுத்ததாக 'ஐயமிட்டுண்' என் கிருர். ஏற்பது இகழ்ச்சி தரும் என்றவர், பிச்சையிட்டுப் பிறகு சாப்பிடு என்கிருர். அதனை ஏற்பார் யாரோ? ஏற்ருல் இழிவா காதோ? இங்ஙனம் வள்ளுவர் முரணேடு அவருக்கு முன்னும் பின்னுமாக வாழ்ந்த நற்றமிழ்ப் புலவர்கள் அவர் கூற்றை ஒட்டியே பேசிச் சென்றுள்ளமை பார்க்கும் போழ்து, வள்ளுவர் தாம் தவறிக் கூறினர் என்ருல், எல்லோருமா தவறிமொழிவர் என்று எண்ணத் தோற்றுகிறது. மேலை நாட்டுப் புலவர்கள் கூட இப்படித்தானே எடுத்தோதி யுள்ளனர். (To give,should be our pleasure but to receive,our shame-Goldsmith) இனி இதன் உட்கருத்து ஓர்வாம்:

கடலினின்று அலைகள் தோன்றி மறுபடியும் கடலையே அடைவது போல, கடவுளினின்றும் வந்த நாம் அவரையே மீண்டும் அடைதல் வேண்டும். இதுவே எடுத்த பிறவியின் இனிய நோக்கம். 'அரிது அரிது மானிடராதல் அரிது' என்ருர் அவ்வை; 'Oh! what a beautiful piece of work mankind is!' என்ருர் நாடகக் கவிஞர் சேஃச்பியர். இப்பிறப்பில் இரண்டு இணைந்து நிற்கின்றன. ஒன்று உயிர்; மற்ருென்று உடல். முன்னதின்றிப் பின்னது இயங்கா; பின்னதின்றி முன்னது உருப்பெரு. உடல் இவ்வுலகத்தது; உயிர் அவ்வுலகத்தது. முன்னையது அழியும் தன்மையது; பின்னையது அழியாத் தகை மையது. ஆயினும் ஆண்டவனிடமிருந்து வந்த உயிர் இவ் வுடலில் தங்கி சில கருமங்களைச் செய்து தூய்மை பெற்றுப் பின் கடவுளை யடைதல் வேண்டும். எனவே உயிர் இவ்வுடலில்

ஸ்ரீவைகுண்டம் குமரகுருபர சுவாமிகள் அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி

1965-66 தேவாரம், நீதிநெறிவிளக்கம்

பரிசுகள் போட்டி



இடமிருந்து வலம்;

| | | |
|---|---|---|
| 1 சங்கரபார்வதி | 2. G. கல்யாணி | 3. S. ஜானகி |
| தேவாரம் | நீதிநெறிவிளக்கம் | நீதிநெறிவிளக்கம் |
| முதற்பரிசு ரூ. 70 | முதற்பரிசு ரூ. 30 | 2-ம் பரிசு ரூ. 25 |

"சகல கலா வல்லி மாலே" பாராயணப் பரிசு 1966ல்
பெற்ற ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அரசினர்
பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாணவிகள்



தங்கியே ஒரு சில இயற்ற வேண்டியுளது; அது தானுக யாதொன்றும் செய்ய இயலாது. இங்ஙனம் இவ்வுடல் வழி இவ்வுயிர் செயல்படும்போது, உடல் வாடாது, துன்புறுது இருத்தல் வேண்டும். வயிற்றுப் பிரச்சனே ஒழிந்தாலல்லவோ வகையான செயலேச் செய்ய இயலும்! இன்னும் சொல்லப் போனல் உயிரை நாம் உடல் மூலமாகத்தானே வளர்த்துக் காத்தல் கூடும். சுவரின்றிச் சித்திரம் இல்லே: உடலின்றி உயிரில்லே. உடம்புவளர, உயிரும் தானுக வளர்கிறது; உடம்பு அழியும் போது உயிரும் அழிந்து விடுகிறது. ஆகலின் உடம்பையும் ஓம்பவேண்டி யுளது.

அன்றியும் உடம்பினுள் உயிர் உள்ளது; அந்த உயிரினுள் ஆண்டவன் உறைகின்ருன். எனவேதான் நம் உடம்பை 'நடமாடும் கோயில்' என்கின்றனர் திருமூலர் போன்ருர். நம் உடல் கடவுள் குடியிருக்கும் திருக்கோயில். ஆகலின் அதனே ஓம்புதல் நம் தலேயாய கடன். இதனேத் தாயுமானுர் 'அகமேவும் அண்ணல்' எனக் குறிக்கிருர்; திருமூலர்,

'உடம்பினே முன்னம் இழுக்கு என்றிருந்தேன்;
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்;
உடம்புளே உத்தமன் கோவில்கொண்டான் என்று
உடம்பினே யான் இருந்து ஓம்புகின்றேனே.'

என்கிருர். இதனேயே ஏசுநாதரும் 'Blessed are the pure in heart; for they shall see God–because in it lies the kingdom of God' (Bible) என்கிருர். எனவே உடம்பிணே ஓம்பிக் காத்தல் ஒவ்வொருவர் கடனுமாம்.

எல்லோரும் உடம்பினேக் காத்து வளர்த்தல் வேண்டுமென்பதில் கருத்துவேற்றுமைக்கு இடமே இல்லே. ஆனுல் எப்படி என்பதில்தான் இருவேறு கருத்துக்கள் உள. உழைத்து உடம்பினே ஊட்டிவளர்த்தல் ஒன்று; இன்ஞென்று உழைக்காது சோம்பியிருந்து துன்புறுது, 'பல்லெல்லாம் தெரியக் காட்டிப் பருவரல் முகத்திற் கூட்டிச் சொல்லெல்லாம் சொல்லி நாட்டித் துணேக்கரம் விரித்து நீட்டி மல்லெல்லாம் அகலவோட்டி மானமதனே வீட்டி' யாசித்தே வயிற்றுப்பாட்டினே கவனித்தல்

முன்னதே சாலச்சிறந்தது எனச் செப்பினர் சான்றோர். மானமே பெரிதென மதித்து வாழ்தல்; அதுவே மாண்புடைப் பெருவாழ்வு. பின்னது மானமில் சிறுவாழ்வு – சீர்மையில் சிறுமை வாழ்வு. முன்னது புலியனையார் வாழ்வு; பின்னது எலியனையார் வாழ்வு. இதனைச் சோழன் நல்லருத்திரன் பாட்டு சொல்லோவியம் தீட்டிக் காட்டுகிறது பாருங்கள்:

‘விளைபதச் சீறிட நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கும்
எலிமுயன் றனைய ராகி யுள்ளதம்
வறன்வலி யுறுக்கு முளமி லாளரொடு
இயைந்த கேண்மை யில்லா கியரோ!
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென
அன்றவ ணுண்ணு தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து
இருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்
புலி பசித் தன்ன மெலிவில் உள்ளத்து
உரனுடை யாளர் கேண்மை யொடு
இயைந்த வைகல் உளவா கியரோ! (புறம் – 190)

ஆயினும் சிற்சில போது ஊழ்வினை காரணமாகவோ என்னவோ உழுதுண்டு வாழ இயலாது, தொழுதுண்டு வயிறு பிழைக்க நேரின் என் செய்வது? இந்த இக்கட்டான நிலையினுக்கு இன் தமிழ்ப் புலவோர் நன்னெறி காட்டியுள்ளனர். அதுதான் இரக் கலாம் என்பது. அடுத்து இரத்தலாகாது என்றும் இயம்பிச் சென்றுள்ளனர். இங்கே முரண்படுவது போலத் தோன்றிடி னும், உண்மையில் மாறுபடாது மொழிந்துள்ளனர் என்றே கொள்ளல் வேண்டும். மானத்திற்கு இழிவு நேராவகையில் இரக்கலாம் என்கின்றனர்; ஏனெனின் உடம்பை வளர்த்தால் தானே உயிர் வாழ முடியும், அப்போது தானே உயிர் தன் கரு மங்களைச் செய்து கடைதேறித் தூய்மையுற்றுக் கடவுளை யடை தல் கூடும். எனவே தான் திருமூலர்,

‘உடம்பார் அழியில் உயிரார் அழிவர்,
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்;
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன், உயிர் வளர்த்தேனே. திருமந்திரம் 724

என்கிருர். நம் நோக்கம், அழியக் கூடிய உடம்பினை அழி யாது காத்து வளர்த்தல் அன்று; அழியா உயிரை—ஆண்ட வனிடத்துச் சேரவேண்டிய அலகில் சோதியைக் காத்து ஓம்பிக் கடவுளிடம் ஒப்படைப்பதே. ஆதலின் நம் கையே நமக்குதவி என்று பாடுபட்டுத் தேடியதைக் கொண்டு உடற்பசி ஒழிப்போம் அங்ஙனம் இயலாது போயின், இரந்தேனும்—தன்மானத்திற்கு. இம்மியும் இழிவு நேராவழி யாசித்தேனும் இவ்வுடம்பினை ஓம்பு வோம்—அதன்மூலம் உயிரினைக் காப்போம். இப்பொருளிலே தான் வள்ளுவர் இரவினை வைத்தார் போலும்! எனவேதான், 'இரத்தலும் ஈதலே போலும்'! 'இரப்பும் ஓர் ஏருடைத்து'! 'இன்பம் ஒருவர்க்கு இரத்தல்' என்றெல்லாம் அடுக்கிக் கொண்டே போகிருர். பரிமேலழகரும் 'மானந்தீரா இரவு இரவாமையோடு ஒத்தலின் அதனுனும், வீடெய்தற் பயத்ததாய உடம்போம்பப் படு மென்னும்' அறநூல் வழக்குப்பற்றி மேலெய்திய துவரத் துறத்தல் (நல்குரவு – 10ஆம் குறள்) விலக்குதற் பொருட்டும் இரவு கூறுகின்ருர்' என்கிருர்.

இரவினையடுத்து இரவச்சத்தை வைக்கிருர் வள்ளுவர். மானம் தீராத இரவு இரவேயன்று—அது இரவாமையே; நம் மிடத்துள்ள பொருளை எடுத்துச் செலவழிப்பது — உண்பது போன்று, பிறரிடம் உள்ளதைப் பயன்படுத்துகிறேம். அவ் வளவே! கரவாது கொடுப்பாரிடம் கேட்பது இரப்பன்று என் கின்ருர்; அங்ஙனம் கொடாது போயின் அஃது 'அவர்பழி, நம்பழியன்று' என்றும் கூறுகின்ருர். அப்படிக் கூறியவர் அடுத்து ஏன் இரவச்சம் என்று வைத்தல் வேண்டும்? தன் மானத்திற்குக் குறைவு நேரும் இரப்பினுக்கு அஞ்ச வேண்டும்; மானம் போகக் கூடிய இரப்பினை இயற்றல் கூடாது என்கிருர். 'மானம் தீரவரும் இரவிற்கு அஞ்சுதல்' எனும் பரிமேலழகர் கூற்று நோக்குக.

இதுகாறும் கண்டவற்ருன், இரக்கவே கூடாது; முடியாத போழ்து (as a last resort) – கடைசியாக, உயிரின் பொருட்டு உடலை ஓம்ப ஏற்கலாம் – மானந்தீராத இரவினை மேற்கொள்ள லாம். இதனுல் இரக்க வேண்டும் என்பது கருத்தன்று; முடியா விட்டால்தான்; மானந்திரக்கூடிய இரப்பினை, மானமழியு

ஒருவன் கொடுப்பதனை ஏற்கக்கூடாது என்ற கருத்து தெளிவாயிற்று.

இன்னணம் வள்ளுவரும் பிறபுலவர்களும் ஏற்பதும் ஈவதும் பற்றிக் கழறிய கருத்துக்கள் தம்முள் முரண்பட்டன வல்ல எனக் கண்டு; அதன் உட்பொருளை நோக்கின் உண்மை புரியும் என்பதறிந்து; வள்ளுவர், துவரத்துறவாமை உப்பிற்கும் காடிக்கும் கூற்று என நல்குரவு அதிகார இறுதிச் செய்யுளில் கூறி முடித்து, அடுத்து இரவினையும் அதனையடுத்து இரவச்சத்தையும் வைத்ததுளது மறந்தோ – வழுக்கியோ – தவறியோ அன்று என்பதுணர்ந்து; ஆழ்ந்து சிந்தித்துத் தெளிந்தே வைத்துள்ளார், அதன் நோக்கம் மானம் தீரா இரவு இரவன்று; அதனை இயலா இறுதி நிலையில் (வீடுபேற்றிற்குரிய உயரினைக் காத்தற்காக உடம்பினையோம்ப) மேற்கொள்ளலாம்; எக்காலத்தும் எந்நிலையிலும் மானம்தீர நேரும் இரப்பிற்கு அஞ்ச வேண்டும் என்ற போக்கினை நோக்காகக் கொண்டு வைத்துள்ளார் வள்ளுவர் என்பதும் தெளிந்தோம். இதுவே தீர்ந்த முடிவாகாது; இத்திக்கில் இன்னும் முயன்று உண்மை காண்போம், உண்மையுறுவோம்.

வாழ்க வள்ளுவம்! **வெல்க அதன் நெறி!!**

---

## குமரகுருபரன் புத்தாண்டு வாழ்த்து

(வெண்பா)

உள்ளும் புறம்பும் ஒளிபெற் றுளங்கவர்ந்து
கொள்ளுங் குமர குருபரனே — தெள்ளுதமிழ்த்
தொண்டியற்றிச் சைவநெறி தோற்றுவித்து வாழ்கநனி
எண்டிசையும் போற்ற இனிது.

இன்றுபதி னேழாண் டினிதுமுடித் தீரொன்பான்
துன்று மகவை தொடருமிதழ் — குன்றுலவு
கொற்றக், குமர குருபரன்பேர் கொண்டுலகில்
குற்றமற வாழ்கநலங் கூர்ந்து.

வித்துவான், கோ. இளையபெருமாள்.

# தலையாய மனிதன்*

திரு. K. M. வேங்கடராமையா அவர்கள், M. A., B. O. L.,
திருப்பனந்தாள்.

---

### சிறந்த பண்புகள்

'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' என்றார் சங்கச் சான்றோருள் ஒருவராகிய ஔவையார். சிறுகுற்றங்களையும் கடிந்து ஆன்றவிந்தடங்கிய கொள்கைய ராகிய சான்றோர் வாழும் ஊரே சிறந்த வூராகும். தனக்கென முயலா நோன்றாள் பிறர்க்கென முயலுநர் உண்மையானே உண்டாலம்ம இவ்வுலகம் என்றார், கடலுண் மாய்ந்த இளம் பெருவழுதி (புறம் 182). இத்தகையோருள்ளும் அரசனுவான் பின்னும் சிறந்த பண்புகள் உடையவனாகத் திகழ வேண்டு மல்லவா? அறநெறியில் ஆட்சிபுரியும் அரசன் "சினனே காமம் கழிகண் ணோட்டம், அச்சம் பொய்ச்சொல் அன்புமிக உடைமை தெறல்கடுமை" என்று எண்ணப்பட்ட 'அறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும்தீது சேண்இகந்து நன்று மிகப்புரிந்து' ஆட்சி செய்ய வேண்டும். அங்ஙனம் ஆண்ட குறுநிலமன்னரும் பேரரசரும் முன்னும் இருந்தனர்; பின்னரும் இருந்தனர்.

### ரஞ்சித் சிங்கு

ஏறத்தாழ 125 ஆண்டுகட்குமுன் பஞ்சாப் அரசனாக வாழ்ந் தவன், ரஞ்சித் சிங்கு. மனிதருள் தலையாய மனிதனாக அவன் கருதப்பட்டான். 19 ஆம் நூற்றாண்டுக் குறுநில மன்னருள் சிறந்தவனாகவும், மக்கள் மனத்துள் நிலைபெற்று வாழ்வதற் குரிய பண்புகளைப் பெற்றவனாகவும் இருந்தான். அவன் மிகப் பெருந்தன்மை பொருந்திய அரசன்; போர்க்களத்திலும் மனிதத் தன்மையோடு விளங்குபவன்.

---

* 7-8-66-ல் வெளிவந்த The Northern India Patrika - என்ற பத்திரிகையில் வெளிவந்த ஒரு கட்டுரையைப் படித்து எழுதியது.

மதச்சார்பற்ற அரசு

ரஞ்சித் சிங்கு ஆட்சியில் குறிப்பிடத் தக்க அம்சங்களுள் ஒன்று, மதச்சார்பற்ற ஆட்சியாகும். 1836-ல் இவன் நோய் வாய்ப்பட்டான். முகமதியர்கள் தம் தொழுகையிடங்களில் இவன் உடல் நலம் பெறவேண்டும் என்று தொழுகை நடத்தினர்கள். இவன் அரசியலில் முகமதியர்கள் பெரும் பங்கு கொண்டிருந்தனர். பாரசீகமொழி அரசாங்க மொழியாகவும் இருந்தது. இத் (Idd), நௌரோசு (Nauroz) ஆகிய பண்டிகை நாட்கள் விடுமுறை நாட்கள். குரானை நன்கு மனப்பாடம் செய்து ஒப்பிப்பவர்கட்கு இவன் ஆட்சியில் பரிசுகளும் வழங்கப் பட்டன. எனவே இவன் ஆட்சியில் இந்து முஸ்லீம் வேற்றுமையே இல்லை எனலாம்.

பேச்சாற்றல்

இவன் மிகவும் வேடிக்கையாகவும் நகைச்சுவையுடனும் பேசும் ஆற்றல் படைத்தவன். "கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்" என்ற குறட் பகுதிக்கு "மற்றையப் பகையாய் ஏற்றுக் கொள்ளாதாரும் பின் அப்பகமை யொழிந்து நட்பினை விரும்பும் வண்ணம் சொல்லப்படுவது" என்று பரிமேலழகர் பொருள் பகர்வர். அதற்கேற்ப வெளிநாட்டவர்களும் இவன் சொல்லாற்றலைக் கேட்பதற்கு விருப்பம் உள்ளவர் ஆவர். ஒரு சமயம் ரஞ்சித் சிங்கின் அரசியல் அதிகாரிகளுள் ஒருவர் பிரிட்டிஷாருடைய அணிவகுப்புப் பயிற்சி (Drill) கிழவியின் நடனம் போல் இருக்கிறது என்ருராம். ரஞ்சித்சிங், பஞ்சாப் மாநிலத்து இளைஞர்கள் எல்லோரும் இந்நடனத்தைப் பயின்ருல் பிரிட்டிஷ் பேரரசியாம் கிழவியைப் பஞ்சாபில் நுழைய விடாது தடுக்கலாம் என்று பதில் அளித்தாராம். ஒருநாள், ஆங்கிலப் பாதிரியார் ஒருவர் "கடவுளை அடைவதற்கு எளிய வழி யாது?" என்று கேட்டதும், "கிழக்கிந்தியக் கம்பெனியுடன் உடன்படிக்கை செய்து கொள்ளுவதே" என்று மன்னன் விடையிறுத்தார்.

பொறுமை

யானையேற்றத்தில் இவற்கு மிகவும் விருப்பம் உண்டு. ஒரு நாள் யானை ஏறிச் செல்லுகையில், போதையிலிருந்த

வெற்றிலை விற்பவன் ஒருவன், மன்னனின் யானையை நிறுத்தி, 'இதை என்ன விலைக்குக் கொடுப்பீர்கள்?' என்று விலை கேட்டான். மறுநாள் அவன் அரசவைக்குக் கொணரப்பட்டான். அவனை நோக்கி, 'என்ன விலைக்கு யானையை வாங்கத் தயாரா யிருக்கிறாய்?' என்று ரஞ்சித் சிங்கு கேட்க, அவன், 'இப்பொழுது வாங்கும் திறம் போய்விட்டது; பகற் காலத்தில் வெற்றிலை விற்றால்தான் என்னால் முடியும்' என்று பதில் கூறினான். அரசன் அவனுக்குப் பரிசு அளித்து அனுப்பினான். இத்தகைய பொறையுடைமையோடும் அன்போடும், ரஞ்சித் சிங்கு நாடாட்சி செய்தான்.

### பேச்சுரிமை

இவன் ஆட்சியில் அரசியல் அலுவலரும் மற்றையோரும் பேச்சுரிமை மிகவுடையராய் இருந்தனர். தம் கருத்துக்களை அஞ்சாது எடுத்துச் சொல்லும் உரிமை எல்லோர்க்கும் உண்டு. ஹரிசிங்குநால்வா என்பவரைச் சேனைத்தலைவராக ஆக்குவது பற்றித் தர்பாரில் விவாதம்நடந்தது. ஒருவர் "அவர்க்கு இரண்டு கலப்பைகள் கொடுத்தால் அவர் செழிப்பான காஷ்மீர் பள்ளத் தாக்கைச் சமப்படுத்தி விடுவார்" என்று குறிப்பாகக் கூறினாராம். அரசன் அன்னோரின் உட்கருத்தை அறிந்து நால்வாவைக் காஷ்மீருக்குக் கவர்னராக நியமிக்கவில்லையாம்.

### எளிமை

ஒரு நாள் அரசன் சாதாரண உடையில் ஊர் சுற்றி வந்தான். வழியில் ஒரு கிழவனுக்குக் கூலியாள் வேண்டிவந்தது. அரசன் கூலியாள்போல அக்கிழவனின் மூடையைச் சுமந்து சென்றான். மூடையைத் தூக்கியவன் அரசன் என்பதை உணர்ந்து கிழவன் அஞ்சியதும், 'இத்தகைய உடற்பயிற்சி நாடாள்பவருக்கு மிகவும் வேண்டும்' என்று கூறிச் சென்றான், ரஞ்சித் சிங்கு.

### ஏழை பங்காளன்

ரஞ்சித் சிங்கு ஏழைகட்கு மனம் இரங்குபவன்; அவர்கள் வருந்தினால் தானும் வருந்துவான்; ஏழைகளின் நலன் பொருட்டுப் பெரும் பொருள் செலவு செய்துள்ளான்.

### கோஹினூர்

இவனுடைய பொருள் நிலையத்தில் கோஹினூர் என்ற விலையுயர்ந்த இரத்தினம் இருந்தது. "அமிருதசரசில் உள்ள பொன்னாலயத்துக்கேனும், பூரிஜகந்நாதத்துக்கேனும் இவ்விலையுயர்ந்த மணியை அளித்துவிடலாம்" என்று பிரதமர் தியான சிங்கு கூறினனும். "வழிவழி வந்ததும், விலை மதிப்பிட முடியாததும் ஆன அரசாங்கப் பொற்பண்டாரத்துப் பொருள் ஆகையால் கொடுக்க முடியாது" என்று பொற்பண்டாரி கொடுக்க மறுத்தனன். மறுத்ததன் பயன் அன்றோ, இன்று அது இந்திய நாட்டைக் கடந்து சென்று பிரிட்டிஷ் மன்னரது முடியில் இலங்குகின்றது!

### முடிப்புரை

ரஞ்சித் சிங்கு ஒரு தத்துவஞானி; உயர் கல்வி கற்றிலனேனும் கூர்த்தஅறிவு படைத்தவன்; கடவுட்பக்தி யுடையவன். அவன் எல்லாராலும் போற்றப் பெற்றான். அவன் உருவப்படம் அந்நாட்டில் எல்லார் வீடுகளிலும் இருக்கிறது. ஒரு நூற்றாண்டு கழிந்த பிறகும் அவனை ஒருவரும் மறந்திலர். இத்தகையோனே மனிதருள் தலையாய மனிதன் ஆவன்.



# ‘ஒருகால் கும்பிட்டால் போதும்’!

பேராசிரியர்,
திரு. கா. மாயாண்டி பாரதி அவர்கள், எம். ஏ., பி. ஓ. எல்.,
St. John's College, Palamcottah.

---

திருச்செந்திற் பெருமானிடம் பாடுகிடந்து பழுத்த தமிழ்ப் புலமை பெற்றவர்; காசிமுதல் கன்னியாகுமரிவரை பாடும் பணி புரிந்து பெரும் புகழ் பெற்றவர்; அருட்கவிஞர் என்று யாவரும் பாராட்டும் சிறப்புப் பெற்றவர்; மதுரை நாயக்க மன்னரும், முகமதிய வேந்தரும் வியக்கும் வண்ணம் கவிமழை பொழிந் தவர்; சைவமும் தமிழும் கைகோர்த்து நடமிடச் செய்த நாவலர் பெருந்தகை; இவ்வாறெல்லாம் போற்றிப்புகழும் ஒருவர் தமிழ கத்திலே பிறந்து வாழ்ந்தார் என்ருல் அவர் குமரகுருபரர் ஒரு வரேயாம். அவருக்கு ஒப்பாரும் மிக்காரும் இத்தமிழகத்தில் முன்னும் இல்லை; பின்னும் இல்லை.

அப்பெருமான் சோழநாடு சென்று திருவாரூர்த் தலத்திலே தங்கியிருந்தார். அங்குக் கோயில் கொண்டுள்ள தியாகராசப் பெருமான் பால் மிகவும் ஈடுபட்டு நெஞ்சம் நெகிழ்ந்தார். அவர் நெஞ்சத்தின் உருக்கமாக விளைந்ததே திருவாரூர் நான் மணி மாலை. வாடும் மலர் மாலையிலும் பாடும் பாமாலையே இறை வனுக்கு ஏற்றமுடையது என்ற எண்ணமுடையவராய்ப் பாடிப் பாடிப் பரவி வந்து கொண்டிருந்தார். ஒருநாள் அவர் உள் ளத்தே ஒரு கருத்துக் கருக் கொண்டது. செந்திற்பெருமானை ஞானசிரியராகக் கொண்டிருந்தாலும் உலகியல் நெறிக்கு ஒப்ப ஒரு ஞானசிரியரைப் பெறவேண்டும் என்பதே அக்கருத்தாகும். அதன்படி தருமபுரத் தலைவராகிய மாசிலாமணி தேசிகரை ஞானசிரியராக அடையும் பொருட்டுச் சென்று வேண்டினர். இளமையும் அழகும் கவிபொலிவும் பொங்கி நின்ற குமரகுரு

பரரை நோக்கிஞர். அவரை ஏற்றுக் கொண்டருள்வதில் தடையில்லை; எனினும் காசிவரை தலயாத்திரை செய்து வந்த பின்னரே ஏற்றுக் கொள்ளும் மடாலய விதிமுறை உள்ளது என்ருர். குமரகுருபரர், காசி சென்று மீள முடியாததற்குள்ள துன்பங்களைக் கூற, அப்படியாயின் தில்லைத் தலத்திலேனும் சிலகாலம் தங்கிவரின் துறவுநிலை அருளலாம் என்று குறிப் பித்தனர். அக்கட்டளையைத் தாங்கி குமரகுருபரர் சிதம்பரப் பெருமானை கண் களிக்கக் கண்டு பாடி மகிழ்ந்து வருவாரா யினர். அவ்வாறு வாழ்ந்த போர்து கூத்தப் பெருமானின் நடங் கண்டு பாடிய ஆழ்ந்தகன்ற நுண்ணிய அருட்கவியின் தன்மை சிந்திப்பார்க்குச் செந்தேன் பொழிந்து சிவமாக்கும் மாண்புடை யதாம்.

தில்லைக்கூத்தன், அம்பலத்திலே இடதுபாதம் தூக்கி அன் பர்கள் அகங்குளிர ஆடிக் கொண்டிருக்கின்ருன் என்பர் அடி யார்கள். ஐந்தொழில் நிகழ்த்தும் அற்புதக் கூத்தே அம்பல வாணர் நடமிடும் காட்சி என்பர் சித்தாந்தச் செல்வர்கள். நாடகக்கலையின் சின்னம் நடராசரின் திரு நடனம் என்பர் கலை வல்லார். அணு ஆற்றலின் தத்துவம் அடங்கி இருப்பதே பொன்னம்பலவாணரின் ஊன்றிய திருவடி நடனக் காட்சி என் பர் விஞ்ஞான வேந்தர்கள். முதலாளி இனத்தின் கொடுங் கோன்மையை நசுக்கும் நடனக் காட்சியே தொழிலாளர் இனத் தின் சின்னம், என்பர் பொதுவுடமைக் கொள்கை வல்லார் அடியவர்கள் எவரை வந்து எமபடர் அணுகிஞலும் உதைத்து விரட்டுவேன் என்று காட்டும் மார்க்கண்டேயர்க்கு அருளிய திருவடிக் காட்சி என்பர் திருமூலர். அடி முடி தேடியும் காணுது மீண்டுவந்து, வேண்டிய, திருமாலுக்கு அருள, எடுத்த பொற் பாதக் காட்சியே தில்லையம்பலவன் திரு நடனம் என்பர் மணி வாசகப் பெருந்தகையார். ஞானிகள் முதல் விஞ்ஞானிகள் வரை சிந்திக்கும் அளவிற்குச் சிதம்பரநாதன் திருநடம் உல கைக் கவர்ந்து நிற்கின்றது. இன்று ஆராய்ந்து, ஆராய்ந்து காணத்துடிக்கும் அத் தமிழ்த் தெய்வத் திருவுருவைச் சிதம்பரத் திலேயே தங்கி வாழ்ந்த குமரகுருபரர் அன்றே கண்டுணர்த்திய கருத்து நினைந்து நினைந்து வியந்து வியந்து போற்றும் தன் மையுடையது; ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்ருேர்க்கும்,

அடியடைய அவாவும் அடியார்க்கும் அளப்பரிய பேரின்பம் தருவதாகும். அவ் வருமைப் பாடலின் சுவை நலங்காண்போம்.

குமரகுருபரர் ஆரூரில் பிறக்க முத்தி, காசியில் இறக்க முத்தி, தில்லையில் நோக்க முத்தி என்பதை அறிந்து முப்பதி களிலும் வாழ்ந்தவர். திருவாரூரில் வாழும்போது அங்குள்ள பெருமானுக்குரிய இருந்தாடழகர் என்ற பெயருண்டு என்பதை அறிந்தார். சிதம்பரத்தில் பதஞ்சலி முனிவருக்கு இடப்பாதம் தூக்கி ஆடியதையும், பாண்டிய வேந்தனுக்கு மதுரைப் பெரு நகரில் கால்மாறி ஆடியதையும் அறிவார். பொன்னம்பலம் வெள்ளியம்பலம், இரத்தினசபை, சிற்சபை, சித்திரசபை, தாமிர சபை, செப்பறை முதலிய எழு மன்றுகளிலும் ஆடிக்காட்டும் மாநாடகம் அறிவார். எனினும் இறைவன் தில்லையில் இடப் பாதம் தூக்கிய திருவடிக்காட்சியில் உள்ளத்தைப் பறிகொடுத் தவர்; கறைக்கண்டனுடும் திறம் காண்மினோ காண்மினோ, என்று உலகவரனைவரையும் இன்பமடைய அழைத்தவர். அப் பெருமகன் தில்லைக்கூத்தர் தூக்கிய திருவடி, குஞ்சிதபாதம், சிவந்தசேவடி, காக்கும்கரம், காட்டும்கரம் (அபயக்கரம், அவி நயக்கரம்) முதலிய அனைத்தையும் ஊன்றி நோக்கி உள்ளக் கிழியில் எழுதி நமக்குக் காட்டியுள்ளார்.

தில்லைப்பெருமான தென்பால் உகந்து ஆடுவதையும், இடப்பாதம் தூக்கி ஆடுவதையும் எமனை நோக்கி அறிவிப்பது போல் கற்பனை செய்துள்ளார். 'நமனே! இன்று உன்னை எச்சரிக்கின்றேன். என் பக்கம் நெருங்கவும் நினைக்காதே! அப்படி வந்தால் உன்பேரும் ஒழிந்து விடும். நீ இருக்கும் தென்திசையை நோக்கி ஒரு திருவடி தூக்கி எம் பெருமான் நடனம் புரிவதைக் கருத்திலே இருத்திக் கொள்' என்று தூக்கிய திருவடியின் சிறப்பைக் காட்டியுள்ளார். முன்னர் மார்க்கண் டேயர்க்காக ஒருகால்உதை வாங்கியிருக்கிருய். இன்னும் வந்தால் அதுதான் கிடைக்கும் என்று உணர்த்துவதோடு அந்த ஒரு காலைக்கும்பிட்டால் ஆன்மாக்களுக்குப் போதும்! எமனுக்குத் துன்பமும், பதஞ்சலிக்கு இன்பமும் தந்த திருவடி எமபயத்தை நீக்கி முத்தி இன்பத்தை நல்கும்; ஒரு தடவை வாழ்நாளில் கும்பிட்டாற் போதும்! கதிகூடும் என்று காட்டுவது அவரைக்

கற்பனைக் கடந்தசோதி என்று சொல்லத் தோன்றுகின்றன! குஞ்சித பாதம் வளைந்தாடும் பொற்பாதம் அந்த வளைவு எப்படி உண்டாயிற்று? பிரமனும் திருமாலும் மாறி மாறித் தலை வணங்கிக் கை குவித்து வளைந்து வழிப்பட்ட வளைவு அப் பெருமான் காலில் உண்டாயிற்று என்கின்றார். சிவந்த திருவடி எப்படி உண்டாயிற்று? எந்த நேரமும் ஒரு காலை தூக்கி ஒரு காலை ஊன்றி ஆடுவதனால் எற்பட்டதா? அல்லது உமா தேவியாரின் மலர்க்கரங்கள் வருடியதால் ஏற்பட்டதா? அன்று அன்று; தேவர்கள் தில்லைக்குப் போந்து முடிபட வழிபட்டதால் சிவந்தன திருவடி என்கிறார். இதனால் அறிவிப்பது, தேவர்கட்கும் மூவர்கட்கும் அப்பாற்பட்டு விளங்கும் முழு முதல்வனை ஒரு கால் கும்பிட்டால் போதும்! அவர்களே முடிபடப் பலமுறை வழிபடும் போது ஆன்மாக்கள் ஒருமுறை கும்பிடலாகாதா? கும்பிட்டாற் போதுமே கதிகூடுமே என்று பரிந்து அழைக்கும் திறம் சிந்தித்து மகிழத்தக்கது. அவற்றிற்கு மேலாக அவரது கற்பனை, எல்லாக் கவிஞர் பெருமக்களையும் விஞ்சி விட்டது. கூத்தனார் ஆடும்போது அபயக் கரம் ஒன்றும், அபிநயக்கரம் ஒன்றும் மேல் நோக்கியும் கீழ் நோக்கியும் அமைந்திருத்தலைக் கண்டார் குமரகுருபரர். தம்மை வந்து வழிபடுவார்க்கு அருள் செய்து காக்கும் கரம் அபயக்கரம். நடனக்கலையின் மெய்ப் பாட்டினை உணர்த்தும் கரம் அபிநயக் கரம் என்பது எல்லோரும் அறிந்தது. ஆனால் அருட்கவிஞராகிய குமரகுருபரர் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறையில் இருகரங்களையும் புது முறையில் கற்பித்து உணர்த்துகின்றார். அபிநயக்கரம் தூக்கிய திருவடியாகிய ஒருகாலைச் சுட்டிக் காட்டுகின்றதாம். அபயக்கரம், அது சுட்டிக் காட்டும் ஒரு காலைக் கும்பிட்டால் போதும்! எனச் சொல்லாமற் சொல்லுகிறதாம். ஒன்று முன் மொழிகின்றது. மற்றொன்று வழி மொழிகின்றது. தீர்மானம் நிறை வேறுகின்றது. 'ஒருகால் கும்பிட்டால் போதும் கதிகூடும்' என்பது நீதிமன்றமாகிய பொன்மன்றிலே முடிபாகிறது. ஆன்மாக்கள் அனைவரும் ஏற்றுக் கொள்ளும் நல்லதீர்ப்பு வழங்குகின்றார் குமரகுருபரர்.

கூடுங் கதியொருகாற் கும்பிட்டாற் போதுமென
நாடும் அவிநயத்தை நண்ணிற்றால் — ஒடியகட்

காதனுர் காணவொரு கால்காட்டிக் கையமைத்து
நாதனுர் செய்யும் நடம்.

(சிதம்பர மும்மணிக்கோவை 480 – 30)

இவ்வருமைப்பாடலில், கண்ணேயே காதாகவுடைய பதஞ்சலி முனிவர் பரமநாடகம் காண இடது பாதத்தை ஒரு கரம் சுட்டிக்காட்ட, மற்ருெரு கரம் கும்பிட்டாற்போதும் என்று அறிவிக்கச் செய்த அம்பலவன் நடனத்தை அன்பர்கள் ஒரு தடவை கண்டு வழிபட்டால் போதும்; இப்பிறவியில் அடைய வேண்டிய முத்தி இன்பம் கைகூடும் என்ற கருத்து அமைந் துள்ளது. 'ஒருகால் கும்பிட்டால் போதும்' என்ற அடி ஆழ்ந் துணரத்தக்கது. சைவ உலகம் கோயில் என்று குறித்துப் பாராட்டுவது சிதம்பரம். மற்றய கோயில்களைப் அவ்வத்தல மூர்த்தியின் பெயரைச் சேர்த்தே குறிப்பிப்பர். ஆதலால், உலக முழுவதையும் கவர்ந்து நிற்கும் ஆடல்வல்லான் எழுந் தருளிய சிதம்பரத் தலத்தை ஒரு தடவை சென்று வணங்கிஞல் பிறவி நீங்கும் என்றும், இறைவனது முழு உருவத்தையும் கண்டு வழிபட முடியாவிட்டாலும் அவன் எடுத்த பொற்பாதம் ஒன்றையேனும் கும்பிட்டால் போதும் என்றும், ஒப்பில்லாத காற்றையே உணவாக உடைய பதஞ்சலியார்க்குக் காட்டிய காட்சியையேனும் கும்பிட்டால் போதும் என்றும், ஒப்பில்லாத மூலாதாரத்திலிருந்து காற்றை எழுப்பி எழுநிலைக்கும் செலுத்தித் திருநடங்கண்டால் போதும் என்றும் நம் வாழ்நாளில் ஒரு தடவையாவது கும்பிட்டாற் போதும் என்றும் பொருள் கொள்ளக் கிடக்கும் நயம் அறிந்து இன்புறுவதற்குரியது.

இந்த ஒரு திருப்பாட்டே குமரகுருபரப் பெருமானைக் கற்பனை கடந்த சோதி எனத் தலைவணங்கச் செய்கின்ற தன்றோ? வாழ்க குமரகுருபரன்!



உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## திருத்தசாங்கம்

திருத்தசாங்கமாவன: முற்பதிக அநுபவப்படி ஓரின்பமாய், அருளுருவாய், ஆனந்தமே யறிவாய், அபேதமாய், அதுவாய், நிற்கும்போது அக்காலத்து ஒன்றையும் முன்னிலைப் படுத் தாமல், விரும்பும் உயிர்களெல்லாவற்றையும் நோக்கித் திரு வருட் பயனான அடிமைப் பெருக்கமாகச் சொல்லலாமே! எல்லா வகை அங்கங்களும் முடிந்த தச காரிய உண்மைத் தெளிவே; என வருளியதைக் காண்க.

இத்திருப்பா நேரிசை வெண்பாக, திருத்தில்லையிலோதியதெனக் காண்க.

திருப்பா திருநாமத் (தி. - ன.) :—

ஏரா ரிளங்கிளியே யெங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமந் தேர்ந்துரையாய் — ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரா னென்று.

(இ - ள்). திருவருளழகு போன்ற ஞானச் சுகமே! கேள்; நமது திருப்பெருந்துறைப் பதியான குருமணியினுடைய அழகு போன்ற திருநாமம் இவையெனத் தெளிவு பிறக்கச் சொல்லாய்; சுகப்பெண்ணே!

கேட்பாயாக! சிவானந்தப்பெண்ணே! சகல தத்துவத் தோற்ற மூலாதார ஞானப்புற்றிடங்கொண்ட ஒளிவளர் செல் வத் தியாகராசன்; செம்பொருளாகிய பதி வர்க்க ருத்திரன்; இவனே முதலாளி; அன்றியும், வேதாகமப்படி பிரமதேவனும் மகா விட்டுணுவும் நமக்கரித்து உள்ளபடி துதிப்பதான அதி ரகசிய பஞ்சாக்கர சொருபன்; இனி வகையான சதா நடன தத்துவருபத் திருநாமப்பொருளை எனது ஆன்ம நாயகனெனவும், நாராயணன் முதலியோரான தேவர்களடிமைப்பணி செய்யும் மகாதேவ னெனவும், சொல்லுவார்களடி; ஞானச்சுகத்தாயே! என அருளியதைக் காண்க.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை-திருவான்மியூர், மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத் தாரின் அநுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 18/- அந் நூல் நிலயத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

## The Raja Of Ramnad Memorial Feeding Charity In The Month Of Adi At Varanasi - Capital Rs. 6000/-

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

This endowment is founded by His Holiness Silasri Kasivasi Arulnandi Tambiran Swamigal avergal, Head of Sri Kasimutt, Tirupanandal in memory of Raja of Ramnad.

A sum of Rs 11,210-30 has been received as Tasdic Allowance and Additional compensation for Fasli 1376 from the Government of Madras as per Proceedings of the Revenue Divisional Officer, Devakottai No. Roc. A. 5. 16471/66 dated 12—7—66 (G. O. No. Ms. 231 dated 17—1—62) under Section 38 (1) and 38 (2) of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act 1948 in respect of Talirmarungur village in Tiruvadanai Taluk of Ramnad District. Out of this amount, a sum of Rs 5000/- has been utilised to make an endowment for conducting feeding charity at Banaras in the Tamil month of Ani. Out of the balance, a sum of Rs 6000/- is now set apart to conduct feeding charity (Brahmin feeding and Maheswara Pooja) at Banaras in the Tamil month of Adi (ஆடி). This endowment shall be called "THE RAJA OF RAMNAD MEMORIAL FEEDING CHARITY AT VARANASI IN THE MONTH OF ADI".

2. The capital of the endowment consists of Rs 6000/- invested in Fixed Deposit for 5 years in the State Bank of India, Kumbakonam, fetching interest at 7 per cent per annum. Fixed Deposit Receipt No. A. 693017 dated 12—8—1966. The administration of the fund shall vest in us and our successors in interest.

3. The annual interest accruing on the capital after deducting Head Office expenses etc. shall be utilised for conducting feeding charity (Brahmin feeding and Maheswara Pooja) in our Kumaraswami Mutt, Kedar Ghat, Banaras in the month of Adi (ஆடி) in addition to the other feeding charities conducted according to the other endowments made by us.

4. The feeding shall be conducted according to the Thitta Japtha (Budget) prepared each year by us and our successors in interest which will depend upon the amount of interest received and the prices of commodities.

5. The endowment shall not be diverted to any other purpose than the one stated above. The capital shall be invested in highest interest yielding securities or fixed deposits as and when necessary. The capital shall always stand in our name and our successors in interest.

Tirupanandal
Dated 16-9-1966 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

The Raja of Ramnad Momorial Feeding Charity in the Month of Adi at Varanasi -Capital Rs. 6000.

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 20-9-66 as No. 52 of 1966 of Book 4 volume 53 pages 207 to 209.

திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

## 'திருமுறை வெளியீடுகள்'

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) ... | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) ... | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம் மட்டும் புதிய பதிப்பு) ... | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் " ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் " ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) ... | 0 | 65 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழைய உரையும் (புதிய பதிப்பு) ... | 2 | 90 |
| 9* | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை ... | 1 | 50 |
| 10 | " " மூலம் மட்டும் ... | 0 | 56 |
| 11* | திருமந்திரம் (புதிய பதிப்பு) " ... | 2 | 25 |
| 12* | பதினோராந்திருமுறை (புதிய பதிப்பு) " ... | 1 | 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம்மட்டும்) ... | 3 | 00 |
| 14 | பெரியபுராணம் உரை நடை ... | 2 | 00 |
| 15 | திருத்தொண்டர் புராண சாரம் ... | 0 | 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு ... | 0 | 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் மூலம் மட்டும் ... | 3 | 00 |
| 18 | திருவிளையாடற் புராணம் உரை நடை ... | 2 | 25 |
| 19 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) ... | 1 | 75 |
| 20 | கந்த புராணம் - முதல் மூன்று காண்டங்கள் மூலம் மட்டும் ... | 2 | 75 |
| 21 | " யுத்த தேவ காண்டம் " ... | 2 | 00 |
| 22 | " தக்ஷகாண்டம் " ... | 1 | 50 |
| 23 | கந்தபுராண உரைநடை " ... | 3 | 00 |
| 24 | திருக்குறள்-அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 | 50 |
| 25 | திருக்குறள்-பொருட்பால் " ... | 2 | 50 |
| 26 | திருக்குறள் - காமத்துப்பால் " | | |
| | ஷை 24, 25, 26. திருக்குறள் 3 புத்தகமும் ... | 4 | 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) | | |
| 28 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் ... | 1 | 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 | 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா- உரையுடன் ... | 0 | 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் ... | 0 | 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) | | |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை ... | 0 | 35 |
| 34 | கந்தர்கலி வெண்பா - ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) | | |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் ... | 0 | 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) | | |
| 37 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும் ஹிந்தியும் ... | 0 | 50 |
| 38 | நீதிநெறி விளக்கம் - மூலம் ... | 0 | 10 |

Registered with the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.
Regd. No. M. 5574 

| | | |
|---|---|---|
| 39 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்–மூலம் ... | 0 15 |
| 40 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் ... | 0 37 |
| 41 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 13 |
| 42 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா-மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக் கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனுட்சியம்மை குறம் ... | 2 75 |
| 43 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | 1 25 |
| 44 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச் செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை ... | 1 00 |
| 45 | பண்டார மும்மணிக் கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 46 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 47 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... | 0 50 |
| 48 | திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் ... | 1 00 |
| 49 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை ... | 0 15 |
| 52 | திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு ... | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு ... | 2 75 |
| 54 | ஐந்து நீதி நூல்கள் ... | 0 10 |
| 55 | ஸ்ரீ சயிலம் ... | 0 10 |
| 56 | திருவாசகம் குறிப்புரையுடன் (விஷய சூசனத்துடன்) பழய பதிப்பு | 1 50 |
| 57 | திருவாரூர்-திருப்பனுவல்கள் ... | 0 10 |
| 58 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 59 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 60 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |
| 61 | Hymns and Proverbs ... | 0 30 |
| 62 | அப்பர்விழா வெளியீடு ... | 0 25 |
| 63 | நவக்கிரகமாண்பு ... | 0 25 |
| 64 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் ... | 0 30 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.
"தியாகராஜ விலாசம்" 53. பிள்ளையார் கோயில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- ● இக்குறிப்பிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து, எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.